நிறுவனர் : நா.மகாலிங்கம் பிப்ரவரி 2022

# ஓம்சக்தி

கலை, இலக்கிய, ஆன்மிக மாத இதழ் ₹15/-



## சிவராத்திரி வழிபாடு...

### முழுமையான தொகுப்பு

# அன்புடன்...

40 வது ஆண்டில்

வணக்கம்,

'ஓம் சக்தி' நாற்பதாவது ஆண்டின் முதல் இதழ் உங்கள் கரங்களில் தவழ்ந்துகொண்டிருக்கிறது. முப்பத்தி ஒன்பது ஆண்டுகளுக்கு முன்பு அருட்செல்வர் அவர்களால் எந்த லட்சியத்துக்காகத் தொடங்கப்பட்டதோ அதிலிருந்து சிறிதும் விலகிச் செல்லாமல்' 'ஓம் சக்தி' தொடர்ந்து வருகிற தென்றால் அதற்குக் காரணம் 'ஓம் சக்தி' இதழின்பால் அவருக்கு இருந்த ஆழ்ந்த ஈடுபாடுதான்.

'உத்தமமான மனிதர்களின் உன்னத முயற்சிகள் எப்போதுமே வெற்றியே பெறுகின்றன' என்பது ஆன்றோர் வாக்கு. அப்படி அருட்செல்வர் அவர்களால் தொடங்கப்பட்ட அனைத்துத் துறைகளும் இன்றைக்கும் சிறப்பான முறையில் இயங்கி வருகின்றன. அந்த வகையில் அவரால் தொடங்கப்பட்ட 'ஓம் சக்தி' இதழும் சமூக நலன் சார்ந்த விஷயங்களை மக்களிடம் கொண்டு சேர்ப்பதில் சிறப்பான முறையில் தன்னை அர்ப்ப ணித்துக்கொண்டிருக்கிறது.

'ஓம் சக்தி' முதல் இதழில், இந்த இதழைத் தொடங்குவதற்கான காரணம் பற்றி அருட்செல்வர் அவர்கள் எழுதிய கட்டுரையை இந்த இதழில் தந்திருக்கிறோம். மேலும், சிவராத்திரியை முன்னிட்டு சிவராத்திரி வழிபாடு பற்றிய முழுமையான தொகுப்பு; சக்தி களஞ்சியமாக அருட்செல்வரின் 'சைவம் என்னும் செல்வம்'; சிறுவர்களுக்கான பகுதியில் படக்கதை மற்றும் நீதிக் கதை; பெண்களுக்கான புதிய பகுதி மற்றும் வழக்கமான பகுதிகளுடன் வெளிவந்திருக்கும் 'ஓம் சக்தி' நாற்பதாவது ஆண்டின் முதல் இதழ் மட்டுமில்லாமல் தொடர்ந்து வரும் காலங்களிலும் பல பயனுள்ள விஷயங்களை உங்களிடம் கொண்டு சேர்க்க உள்ளது.

இங்கே ஒன்றை முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். ஒரு பத்திரிகையின் வளர்ச்சிக்குப் பிரதானமாக இருப்பது வாசகர்களின் அன்பும் ஆதரவும் மட்டுமில்லாமல், பத்திரிகையை வாசகர்களிடம் கொண்டு சேர்க்கும் முகவர்கள், வியாபாரிகள் மற்றும் தரமான ஒரு பத்திரிகைக்கு நிதிச்சுமை ஏற்படக்கூடாது என்ற அக்கறையுடன் விளம்பரம் தந்து உதவும் விளம்பரதாரர்கள் ஆகியோரின் ஆதரவும் முக்கியமான காரணம்தான்.

அந்த வகையில் 'ஓம் சக்தி' இதழின் வளர்ச்சிக்கும் தொய்வுறாத பயணத்துக்கும் துணை நிற்கும் வாசகர்கள், முகவர்கள், வியாபாரிகள், விளம்பரதாரர்கள் அனைவருக்கும்



அன்பும் நன்றியும்

**பொறுப்பாசிரியர்**




# அருட்செல்வரின் பாதையில் தொடர்ந்து பயணிப்போம்...

இந்த 2022-ம் ஆண்டு சக்தி குழுமத்துக்கு உன்னதமான ஆண்டு. இந்த வருடம்தான் அருட்செல்வர் அவதாரத்தின் நூறாவது ஆண்டு தொடங்குகிறது. இதே வருடத்தில்தான் அவரால் தமிழ் மக்கள் நலன் கருதி தொடங்கிய நம்முடைய ஓம்சக்தி இதழின் 40-வது ஆண்டும் தொடங்குகிறது. அருட்செல்வரின் கனவுகளையும் எண்ணங்களையும் கடந்த பல ஆண்டுகளாக நம்முடைய ஓம்சக்தி பத்திரிகை மிகவும் பெருமையுடன் தாங்கி பவனி வந்துள்ளது; இனியும் பவனி வர உள்ளது.

மிக எளிய விவசாயக் குடும்பத்தில் பிறந்து பின்னாள்களில் மக்களின் மிகச் சிறந்த பிரதிநிதியாக, தொழில் அதிபராக, நற்கல்வி புகட்டும் ஆசானாக, தேகநலம் பேணும் மருத்துவராக, ஆன்மாவைப் பேணும் தயாளனாக என்று பல்வேறு துறைகளில் தம்முடைய தனித்துவமான முத்திரையைப் பதித்தவர் அருட்செல்வர் அவர்கள்.

தேசத்திற்காகவும், மக்களின் நலனுக்காகவும் பல நல்ல திட்டங்களை முன்னெடுத்துச் சென்றதுடன், நல்ல பல காரியங்களையும் செய்தவர். தம்முடைய 60-வது ஆண்டு தொடங்கிய வேளையில், தம்முடைய எண்ணங்கள் மட்டுமில்லாமல், தமிழர்தம் பண்பாடு, கலாசாரம், பாரம்பர்யம் போன்றவற்றை வரும் சந்ததியினர் அறிந்துகொள்ள வேண்டும் என்ற பெருவிருப்பத்தின்பேரில் ஓம்சக்தி பத்திரிகையைத் தொடங்கினார்.

அணுவளவும் எந்த ஒரு வேறுபாடும் இருக்கக்கூடாது எனக் கருதி, அரசியல் மற்றும் மாறுபட்ட கருத்துகளைப் பிரதிபலிக்கும் எந்த ஒரு துறையையும் விடுத்து, மக்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து எப்படி வழிநடத்தவேண்டும் என்று ஒரு வழிமுறையையும் அவர் அடையாளம் காட்டி உள்ளார்.

வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்தத் தருணத்தில் ஓம்சக்தி மீண்டும் ஒரு புத்துணர்ச்சியுடன் தன் பயணத்தைத் தொடங்குகிறது. தமிழ் மக்கள் எங்கிருந்தாலும் அவர்களின் பாரம்பர்யத்தையும் கலாசாரத்தையும் போற்றிக் காப்பதுடன், அவற்றை மக்களிடம் கொண்டு சேர்க்கவும் ஓம்சக்தி தயாராக உள்ளது.

வரும் காலங்களில் தமிழரின் பாரம்பர்ய வைத்திய முறையான சித்த வைத்தியம், நாடிக் கலை, வர்மக் கலை, சித்திரக் கலை, சிற்பக் கலை, களரி போன்ற தற்காப்புக்



கலை போன்ற அனைத்துக் கலைகளையும், அவற்றைப் பேணி வளர்த்த ஆலயங்களைக் காப்பாற்றிய பெருமைக்கு உரிய மக்களைப் பற்றியும் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் மட்டுமில்லாமல், மாறி வரும் காலத்துக்கேற்ப சமூகத்துக்குப் பயன்தரத்தக்க நல்ல விஷயங்களையும் தரம் குறையாமல் வாசகர்களிடம் சமர்ப்பிக்கத் தயாராக உள்ளோம்.

சக்தி குழுமத்தின் அடுத்தடுத்த தலைமுறையினரும் அருட்செல்வர் அவர்களின் கோட்பாடுகளை மனதில் கொண்டு எவ்வாறு செயல்பட வேண்டுமோ அவ்வாறே நம்முடைய ஓம்சக்தி பத்திரிகையையும் தொடர்ந்து நடத்துவோம் என்பதை புனிதமான இந்தத் தருணத்தில் தெரிவித்துக் கொள்கிறோம்.

அருட்செல்வரின் பாதையில் தொடர்ந்து பயணிப்போம்...

அன்புடன்

மா. மாணிக்கம்

**ஆசிரியர்**

# ஓசக்தியின் லட்சியப் பயணம்...

1983-ம் வருடம் பிப்ரவரி மாதம் வெளியான ஓம்சக்தி முதல் இதழில், இதழின் இலட்சியம் மற்றும் அவசியம் குறித்து அருட்செல்வர் அவர்கள் எழுதிய கட்டுரையிலிருந்து சில பகுதிகள்...

இது அணுயுகம்; அவசர யுகம்; புவியிலிருந்து விண்வெளி ஓடங்களில் ஏறிக்கொண்டு, பிரபஞ்சவெளியில் மனிதன் திக்விஜயம் கிளம்பிவிட்ட யுகம்.

எதையும் ஆற அமர யோசித்துப் பார்க்க நமக்கு இப்போது அவகாசம் இல்லை. அதனாலேயே நம் உடலுக்கும் உள்ளத்துக்கும் எத்தனையோ தீங்குகள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. நம்மையறியாமலேயே நம் ஆரோக்கியமும், அமைதியும், நற்பண்புகளும் சிதைந்து வருகின்றன.

அவை எல்லாம் சிதைந்து வருவதைக்கூட நாம் உணர முடியாதபடி நம் வாழ்க்கையின் ஓட்டம் இருக்கிறது.

பிரபஞ்சம் முழுவதிலும், ஆழ்கடலிலும், இமயப் பனியிலும், துருவப் பிரதேசக் குளிரிலும், கானக இருட்டிலும், வானவெளி விண்மீன் கூட்டத்திலும், தொழிலாற்றலிலும், மருத்துவத்திலும், பெரியோர் வாழ்க்கையிலும், ரிஷிகள் தந்த செல்வங்களிலும், அநாதியான காலவெளியிலும், புராதன இதிகாசங்களிலும் கணக்கிலடங்காத அரிய செய்திகள் விரவிக் கிடக்கின்றன.

கதைகளை விட சுவையானவை அவை. உடலுக்கும் உள்ளத்துக்கும் பயன் தருபவை. நம்மை வளர்ப்பவை. ஒருமுறை அவற்றுடன் அறிமுகம் செய்துகொண்டு விட்டோமானால் போதும் மேலும் மேலும் புதிது புதிதாக அறியும் ஆவல் நமக்கு ஏற்பட்டுவிடும்.

அந்த ஆவலைத் தூண்டி, இந்த அவசர யுகக் காரிருளிலும் பத்திரமான பாதையில் உங்களை அழைத்துச் செல்லவே, இந்தச் சின்னஞ்சிறிய அகல்விளக்கை கை விளக்காக உங்கள் முன் ஏற்றி வைக்கிறேன்.

இந்தச் சிறு விளக்கு உங்களை ஒரு புதிய அறிவு உலகிற்கு இட்டுச் செல்லும்; உங்களுக்கு அமைதி தரும்; ஒவ்வொரு மாதமும் புதிதாகப் பல பயனுள்ள விஷயங்களை நீங்கள் தெரிந்துகொள்ள உதவும்.




புராதனப் பெருமைகளையும், அதே சமயம் நவீன விஞ்ஞான யுகத்துச் செய்திகளையும் உங்கள் முன் வைக்கும்.

உதாரணமாக இந்த இதழைப் பாருங்கள் (ஓம்சக்தி பிப்ரவரி 1983), நம் முன்னோர்களிடம் இருந்த ஒப்பற்ற வான சாஸ்திர அறிவு பற்றிய அரிய தகவல்களை ஒரு கட்டுரை கூறுகிறது. அதே சமயம் மிருக இயல், அன்பு ஆகியவற்றை விளக்கும் தற்காலத்து அரியதொரு சுவையான சுயசரிதப் புத்தகச் சுருக்கமும் வெளியாகியிருக்கிறது.

சைவ உணவின் சிறப்பை ஒரு கட்டுரையில் தெரிந்துகொள்கிறோம். எழுபதினாயிரம் ஆண்டுகளுக்கு முன் மனிதன் எங்கே வாழ்ந்தான் என்று ஆய்வு செய்கிறது ஒரு கட்டுரை. கூடவே இன்று வாழும் நம் முகத்தை மருவின்றிப் பேணும் வழிகளைப் பற்றியும் ஒரு கட்டுரையில் அரிய செய்திகளைப் படிக்கலாம்.

இவ்வாறாக 'ஓம்சக்தி' எல்லா அம்சங்களோடும், எல்லா சிறப்புகளோடும் உங்களைத் தொடர்பு கொள்ளச் செய்யும் பத்திரிகையாகத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டிருக்கிறது.

நவீன இலக்கியத்திற்கோ, நாகரிகத்திற்கோ அது எதிரியல்ல; அது சிறந்த சிறுகதைகளையும், குறுநாவல்களையும் தாங்கி வரும்.

இந்த இதழில் வந்திருக்கும் குறுநாவல், உயர்வதையே லட்சியமாகக் கொண்டிருந்த நம் முன்னோர்களைப் பற்றிய ஓர் அருமையான சித்திரமாகவே அமைந்திருக்கிறது. அதில் கோபுரம் போன்ற உயர்ந்த மனிதர்களைக் காணலாம்.

இதேபோல் ஒவ்வொரு 'ஓம்சக்தி' இதழும் பல துறைகளிலும் உள்ள அரிய தகவல்கள், கதை, கவிதைகளுடன் வந்து உங்கள் அறிவுலகைப் பிரகாசப்படுத்தும். உங்கள் நல்லாதரவுதான் தேவை.

அன்புள்ள

**நா.மகாலிங்கம்**

கௌரவ ஆசிரியர்

**(ஓம் சக்தி இதழ்களில் வெளியான சிறுகதைகள், குறுநாவல்கள், அரிய தகவல்கள் அடங்கிய கட்டுரைகள் இனி வரும் ஓம் சக்தி இதழ்களில் சக்தி களஞ்சியம் பகுதியில் வெளிவர உள்ளன என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம். அடுத்த இதழில் 'ஒரு தேவதையும் சில மிருகங்களும்' என்ற குறுநாவல் உங்களுக்காக.)** •

# சிவ...



உருக்கப்பட்ட நெய் நிறமற்றதாக இருக்கும். அதே நெய் குளிர்ந்தவுடன் வேறொரு நிறத்தை அடையும். கடவுளும் உருவமற்ற நிலையில் இருப்பதாக சாஸ்திரம் கூறுகிறது. ஆனால் அவரே பக்தர்களின் உள்ளத்தில் அன்பு பூரணமாகும்போது பக்திக்கு கட்டுப்பட்டு உருவம் தாங்கி வருகிறார். விஷ்ணு போல சிவன் அவதரிக்காவிட்டாலும், அநேகமான மோகன ரூபங்களை எடுத்து நம்மைக் காக்கிறார்.

ஆபரணம் ஏதும் அணியாமல் இயற்கையழகுடன் பிட்சாடன மூர்த்தியாக கோலம் கொண்டார். ஒருபுறம் அழகே வடிவெடுத்தது போல சுந்தரேஸ்வரராக காட்சியளிக்கிறார். பக்தர்களின் பயம் போக்கி அபயம் தரும் விதத்தில் பைரவ மூர்த்தியாக விளங்குகிறார். வீரத்தை சிறப்பிக்கும் விதத்தில் வீரபத்திரராக அருள்பாலிக்கிறார். தேவர்கள் விரும்பிய ஆனந்தத்தை அளிக்கும் விதத்தில் சித்சபையில் நடனமாடுகிறார்.

எல்லாவற்றுக்கும் மேலாக ஞானத்தை அருளும் தெய்வமாக தட்சிணாமூர்த்தியாக மவுன நிலையில் அமர்ந்து சனகாதி முனிவர்களுக்கு உபதேசிக்கிறார். இப்படியாக 64 திருக்கோலங்களில் சிவன் அருள்பாலிக்கிறார்.

சர்வேஸ்வரனே உலகை படைக்கும்போது பிரமா என்றும், காக்கும்போது விஷ்ணு என்றும், சம்ஹாரமாக தன்னுள் அடக்கும்போது சிவன் என்றும் மூன்று விதங்களில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார். இந்த மூன்று மூர்த்திகளில் பரமசிவனே கருணை மிக்கவராக கருத வேண்டியிருக்கிறது பாவம் புரிந்தவன், புண்ணியம் செய்தவன், ஞானி, அஞ்ஞானி என்று உயிர்களை பாகுபாடு இல்லாமல் சம்ஹார காலத்தில் அனைவருக்கும் ஓய்வு அளித்து சுக துக்கத்தில் இருந்து சிறிது காலம் ஓய்வு அளித்து கருணை புரிகிறார். ஆகவே சிவனே கருணை வள்ளல். தாயு

# த்திரி தாத்பர்யம்

## காஞ்சி பரமாசார்ய சுவாமிகள்





மானவர் சிவனை 'அம்மையப்பா' என்று அன்புடன் அழைக்கிறார்.

உயிர்களுக்கு அடைக்கலம் அளிக்கும் சிவனைப் போற்றி வழிபடும் நாளே சிவராத்திரி. நம் அன்புக்கு கட்டுப்பட்டு உருவத்திற்கும் அருவத்திற்கும் இடையில் பரமசிவன் லிங்கோத்பவ மூர்த்தியாக நள்ளிரவில் விஸ்வரூபம் எடுத்த நன்னாளே சிவராத்திரி. சிவனின் முடியைக் காண விரும்பிய பிரமா அன்னப் பறவையாக உருவெடுத்து ஆகாயத்தில் பறந்தார்.

விஷ்ணுவோ பன்றி வடிவில் பாதாளத்தை அடைந்தார். இருவராலும் அவரைத் தரிசிக்க முடியவில்லை. ஜோதி வடிவில் இருந்து வெளிப்பட்ட இந்த லிங்கோத்பவ மூர்த்தியை கோவில் பிராகாரத்தில் தரிசிக்கலாம். ஜோதி வடிவமான இறைவன் லிங்கமாக வெளிப்பட்ட புனிதமான நாளே சிவராத்திரி. இந்த நாளில் தூக்கம் தவிர்த்து சிவ நாமங்களை ஜெபித்து சிவனைத் தரிசிப்போம். அவரது பூரண அருளுக்குப் பாத்திரராவோம்.

(1952-ம் வருடம் பிப்ரவரி மாதம் 23-ம் தேதி நடைபெற்ற மகா சிவராத்திரியன்று அப்போது மயிலாடுதுறையை அடுத்த நாகங்குடி கிராமத்தில் எழுந்தருளி இருந்த காஞ்சி மகா பெரியவர் 'சிவராத்திரி மகிமை' குறித்து ஆற்றிய உரையிலிருந்து)

# சிவராத்திரி நாளில் சிவனை சிந்தித்திருப்போம்..!

## உபவாசம்

மகாசிவராத்திரி தினத்தில் உபவாசம் இருப்பது பிரதானமாக அமைந்துள்ளது.

'உபவாசம்' என்ற சொல் உப + வாசம் = உபவாசம் என்று அமைந்துள்ளது. 'உப' என்ற வடமொழி சொல்லுக்கு 'அருகில்' என்று பொருள்", 'வாசம்' என்ற வடமொழி சொல்லுக்கு 'இருத்தல்', 'வசித்தல்', வாழ்தல்' ஆகிய பொருள்கள் உண்டு.

எனவே 'உபவாசம்' என்பதற்கு 'அருகில் இருத்தல் அதாவது, இறைவனின் அருகில் இருத்தல் - இறைவனைத் தியானம் செய்தல்' என்பது பொருளாகும்.

எனவே சிவராத்திரி தினத்தில் உணவு உட்கொள்ளாமல் இருப்பதுடன் – ஸ்தூலமாகவும், சூட்சுமமாகவும் – சிவனுடன் இருப்பதுதான் உபவாசம் என்ற சொல்லின் உண்மைப் பொருளாகும்.

சிவன் கோயில்களுக்குச் செல்வது, சிவ பூஜை செய்வது, சிவன் தொடர்புடைய நூல்களைப் படிப்பது - படிக்கக் கேட்பது, சிவன் தொடர்புடைய பக்திப் பாடல்கள் பாடுவது ஆகியவற்றைச் செய்வது சிவனுடன் ஸ்தூலமாக இருப்பது என்று நாம் பொருள் கொள்ளலாம்.

சிவத் தியானம், சிவ நாமஜபம், பிரார்த்தனை போன்றவற்றைச் செய்வது சிவனுடன் சூட்சுமமாக இருப்பது என்று நாம் பொருள் கொள்ளலாம்.

சைவ சமயத்தில் சந்தானக் குரவர்களில் மூன்றாமவராக மறைஞான சம்பந்தர் என்பவர் போற்றப்பெறுகிறார். அவர், சிவராத்திரி அனுஷ்டான முறையை ஆகம முறையில் விளக்கி, குறட்பா வடிவில் 'மகாசிவராத்திரி கற்பம்' என்று ஒரு நூல் எழுதியிருக்கிறார்.



சிவராத்திரி நாளில் வீட்டில் சிவ பூஜை செய்தல், சிவன் கோயில்களில் நடைபெறும் பூஜைகளில் கலந்துகொள்ளுதல் ஆகியவற்றை நாம் தவறாமல் செய்ய வேண்டும்.

கிறிஸ்தவர்கள், 'சாம்பல் புதன்கிழமை' என்ற நாளில் உண்ணா நோன்பு இருக்கிறார்கள்.

இஸ்லாமியர்கள் ரம்ஜான் பண்டிகை (ரமலான் நோன்பு) நாள்களில் கடும் உண்ணா நோன்பைப் பின்பற்றுகிறார்கள். இஸ்லாம்

சமயத்தின் ஐந்து முக்கியத் தூண்களாக விளங்கும் ஐந்து கடமைகளில் ஒன்றாக ரமலான் நோன்பு விளங்குகிறது.

ஜைன மதத்திலும் உண்ணா நோன்பிற்குப் பெரிதும் முக்கியத்துவம் அளித்திருக்கிறார்கள்.

"பிரார்த்தனை இறைவனை அடையும் பாதையில் பாதி தூரம்தான் ஒருவனை அழைத்துச் செல்கிறது. உண்ணாநோன்புதான் இறைவனின் வாயில் வரை ஒருவனை அழைத்துச் செல்கிறது" என்ற பாரசீகப் பழமொழியையும் இங்கு நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

ஏகாதசி நாள்களில் வைணவர்களும், பிரதோஷ நாள்களில் சைவர்களும் உண்ணா நோன்பை மேற்கொள்கிறார்கள்.

நம் காலத்தில் வாழ்ந்த மகாத்மா காந்தியடிகள், உண்ணாநோன்பை வலியுறுத்தி வந்ததை நாம் அனைவரும் அறிவோம்.

ஆன்மிக முக்கியத்துவம் வாய்ந்த விரத நாள்களில் உண்ணாநோன்பு இருந்தால், நம் உடலில் உள்ள நச்சுப்பொருள்கள் வெளியேறி உடல் ஆரோக்கிய நிலையில் இருக்கும்.

"பொறுமை; மௌனம்; அஹிம்சை; சத்தியம்; தயை; தானம்; தூய்மை; புலனடக்கம்; வழிபாடு; ஆனந்தம்; பிறர் பொருளை அபகரிக்காமல் இருத்தல் போன்ற நற்குணங்களுடன் அருள் மயமான சிந்தனைகளைக் கொண்டிருப்பதுதான் உபவாசம்" என்று, பவிஷ்ய புராணம் தெரிவிக்கிறது.

வராக உபநிஷதம், 'உபவாசம் இருத்தல் என்பது ஜீவாத்மா, பரமாத்மாவைச் சேரும் பொருட்டே' என்று கூறுகிறது.

தேவி புராணம், 'சிவ சிந்தனை, அபிஷேகம், ஜபம், பிரார்த்தனை என்று இருப்பதே உபவாசமாகும்' என்று குறிப்பிடுகிறது.

எனவே சொல்லாலும், செயலாலும், சிந்தனையாலும் சிவனிடமே நாம் சிவராத்திரி நாளன்று கட்டாயம் லயித்திருக்க வேண்டும்.

## கண் விழிப்பு

சிவபதவியைத் தரவல்ல சிவராத்திரி விரதத்தில் 1. உபவாசம் இருப்பது, 2. இரவில் கண் விழித்திருப்பது, 3. சிவ பூஜை ஆகிய மூன்றும் முக்கியத்துவம் பெறுகின்றன. என்றைக்காவது தூங்காமல் இருந்தால், 'இன்று எனக்கு சிவராத்திரி' என்று கூறும் வழக்கமும் இருந்து வருகிறது. இங்கு 'சிவராத்திரி' என்ற சொல், 'உறங்காமல் இருத்தல்' என்ற பொருளைத் தருகிறது - இது சிவராத்திரி விரதத்தில், இரவு உறங்காமல் இருக்கவேண்டும் என்பதன் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது.

வாழ்க்கையில் விழிப்புடன் இருந்தால்தான் எந்தத் துறையிலும் முன்னேற முடியும். ஆன்மிக விழிப்புடன் இருப்பவர்களுக்கு மட்டுமே ஆத்மலாபம் கிட்டும். நாம் ஆன்மிக விழிப்புடன் இருக்க வேண்டும் என்பதையே சிவராத்திரி கண் விழிப்பு உணர்த்துகிறது.



ஆன்மிகத் துறையில் பகலை விடவும் இரவுக்கு அதிக முக்கியத்துவம் இருக்கிறது.

மகாசிவராத்திரி விரதம் இருப்பவர்கள் இரவு உறங்காமல் இருப்பதுடன் சிவ பூஜை, சிவ நாமஜபம், சிவ தியானம், பிரார்த்தனை, சிவ பஜனை, சிவன் தொடர்புடைய நூல்களைப் படித்தல், சிவாலய தரிசனம், பிரம்மசர்யம் காத்தல், சிவ தொண்டு ஆகியவற்றையும் தவறாமல் செய்யவேண்டும்.

தாயுமானவர் தமது பாடலில், 'சிவராத்திரிபோது துயிலோம் என்ற விரதியர்' என்று கூறியுள்ளார்.

சிவராத்திரி நாளில் உணவு உட்கொள்வது என்பது மீண்டும் மீண்டும் பிறவிச்சூழலில் ஆழ்த்தும் வினைகளைக் குறிக்கும்; சிவராத்திரி நாளன்று உணவு நீக்கம் என்பது மீண்டும் மீண்டும் பிறவிச் சூழலில் ஆழ்த்தும் வினைகளை அகற்றிக்கொள்வதைக் குறிக்கும்; தூங்காமல் விழித்திருத்தல் என்பது ஆன்மா தன்னை உணர்ந்துகொள்வதைக் குறிக்கும்.

எனவே சிவராத்திரியில் உணவைத் தவிர்த்தல், உறக்கத்தைத் தவிர்த்தல் என்பது உண்மையில் ஆன்மா வினைகளை வென்று தன்னை உணர்ந்துகொள்ளவே ஆகும் என்பது பெரியோர்களின் கருத்தாகும்.

சிலர், ‘சிவராத்திரியன்று தூங்காமல் இருக்க வேண்டும்’ என்ற எண்ணத்தில், மனதைப் பாழ்படுத்தும் சினிமா - தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பார்ப்பது, வானொலியில் தேவையில்லாதவற்றைக் கேட்பது, சீட்டாடுவது, சொக்கட்டான் ஆடுவது, பரமபதம் ஆடுவது, ஊர் சுற்றுவது போன்ற கேளிக்கைகளில் ஈடுபடுகிறார்கள். இவ்விதம் செய்வது சிவராத்திரி விரதம் அல்ல என்பதோடு, ‘சிவராத்திரிக்கு விரோதம்’ என்பதையும் நாம் உணர வேண்டும்.

சிவராத்திரி இரவில் தூங்குபவர்கள், அன்றைய தினம் தாங்கள் பெற வேண்டிய பெரும் புண்ணியத்தை மட்டும்தான் இழக்கிறார்கள். ஆனால் சிவராத்திரி நாளில் தூங்காமல் இருந்து தேவையற்ற சினிமா - தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பார்ப்பது போன்ற கேளிக்கைகளில் ஈடுபடுபவர்கள், பெரும் பாவத்தையே தேடிக்கொள்கிறார்கள்.

ஆனால், தொலைக்காட்சி, வானொலி போன்றவற்றில் சிவன் தொடர்புடையவற்றை சிவராத்திரி நாளில் பார்ப்பதில், கேட்பதில் தவறில்லை.

## “சிவராத்திரி தினத்தில் செய்ய வேண்டியவை

மகாசிவராத்திரிக்கு முதல் நாளே ஒருபொழுது உணவு அருந்துவதுடன், மகாசிவராத்திரி விரதம் தொடங்குகிறது. இவ்விதம் செய்வது மறுநாள் உபவாசம் இருப்பதற்கேற்ப, உடலையும் மனதையும் பக்குவப்படுத்துகிறது.

சிவராத்திரி நாளன்று காலையில் நீராடி

# அபிஷேக அர்ச்சனை அலங்கார விதிமுறைகள்:

| விவரம் | முதல் ஜாமம் | 2 - ம் ஜாமம் | 3 - ம் ஜாமம் | 4 - ம் ஜாமம் |
|---|---|---|---|---|
| மேற்பூச்சு | பச்சைக் கற்பூரம் சேர்ந்த சந்தனம் | அகில் சேர்ந்த சந்தனம் | கஸ்தூரி சேர்ந்த சந்தனம் | புனுகு கலந்த சந்தனம் |
| வேள்விப் பொருள்கள் | சந்தனக்கட்டை | அகில் கட்டை | எள் | லவங்கம் |
| அபிஷேகம் | பஞ்சகவ்யம் | பஞ்சாமிர்தம் | தேன் அல்லது இளநீர் அல்லது பால் | கரும்புச்சாறு அல்லது சந்தனம் கலந்த நீர் |
| ஆடை நிறம் | சிவப்பு (செம்பட்டு) | மஞ்சள் பட்டு | வெண்பட்டு | நீலப்பட்டு |
| அட்சதை | அரிசி | வால் கோதுமை | கோதுமை | அரிசி, உளுந்து, பயிறு, தினை முதலிய ஏழு வகை தானி யங்கள் |
| இலை (அர்ச்சனை) | வில்வம் | வில்வம், துளசி | முட்கிலுவை, வில்வம், அருகு | விளா இலை |
| பூ | தாமரை, அலரி | செண்பகம், தாமரை | செங்கழுநீர், ஆத்தி, பிச்சி, முல்லை, ஜாதிமல்லிகை | நந்தியா (வட்டை) வர்த்தம், நீலோத்பலம் அல்லது எல்லா வகையான மலர்கள் |
| பழம் | வில்வப் பழம் | பலாப் பழம் | மாதுளை | வாழை முதலான பலவிதப் பழங்கள் |
| நைவேத்தியம் | பொங்கல், சாதம், காய்கறிகள், பல காரங்கள் | பாயசம், பரமான்னம், லட்டு முதலிய பலகாரங்கள் | எள் சாதம், மாவும் நெய்யும் சேர்ந்த பலகாரம் | சுத்தான்னம், கோதுமை, சர்க்கரை, நெய் சேர்ந்த உணவு (பலகாரங்கள்) வகைகள் |
| ஆபரணம் | பொன் ஆபரணம் | மரகத ரத்தினா பரணம் | மாணிக்க ஆபரணம் | முத்து ஆபரணம் |
| தூபம் | பச்சைக் கற்பூரம் சேர்த்த சந்தனம் | அகில் புகை | கஸ்தூரி, பச்சைக் கற்பூரம் சேர்த்த சந்தனம் | புனுகு சேர்த்த சந்தனம், குங்குமப்பூ |
| தீபம் | விளக்கெண்ணெய் - புஷ்ப தீபம் | இலுப்பை எண்ணெய் - நட்சத்திர தீபம் | நெய் பஞ்சமுக தீபம் | நல்லெண்ணெய்- வில்வ தீபம் |
| பாராயணம் | ரிக் வேதம் | யஜுர் வேதம் | சாம வேதம் | அதர்வண வேதம் |

தூய உடையணிந்து, சிவாலயம் சென்று சிவதரிசனம் செய்யவேண்டும். அங்கு சிவன் சந்நிதியில், "சிவபெருமானே! இன்று நான் மகாசிவராத்திரி விரதம் அனுஷ்டிக்க இருக்கிறேன். அதற்கு உகந்த மனநிலையையும் சூழ்நிலையை யும் எனக்குத் தந்து அருள் புரியுங்கள். இன்று இந்த விரதத்தை நான் நன்றாக அனுஷ்டிப்பதற்குத் தாங்கள் எனக்குக் கிருபை செய்யுங்கள், தீய ஆசைகள் என்ற பகைவர்கள் என்னை அணுகாமல் இருக்க வேண்டும் என்று எனக்குத் திருவருள் புரியுங்கள். இந்த நன்னாளில் நான் என்னுடைய சொல், செயல், சிந்தனைகளில் சிவமயமாகவே இருப்பதற்கு எனக்கு அருள் புரியுங்கள். என்னுடைய சொல், செயல், சிந்தனை ஆகியவை இந்தப் புண்ணிய தினத்தில் தவறான காரியங்களில் - பாவ காரியங்களில் ஈடுபடாமல் இருப்பதற்கு அனுக்கிரகம் செய்யுங்கள்" என்று பிரார்த்தனை - சங்கல்பம் செய்துகொள்ள



வேண்டும். சிவாலாயம் செல்ல இயலாதவர்கள், தங்கள் வீட்டிலுள்ள பூஜையறையில் சிவபெருமானிடம் இந்தப் பிரார்த்தனையை – சங்கல்பத்தைச் செய்ய வேண்டும். இயன்ற வரையில் அன்று நாள் முழுவதும், சிவனைப் பற்றிய சிந்தனை நம் இதயத்தை விட்டு நீங்காமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

அன்றைய தினம் முழுவதும் சிவநாம ஜபம், சிவ தியானம், பிரார்த்தனை, சிவன் துதிகள், சிவன் பெருமைகளைக் கேட்டல் போன்றவற்றின் மூலம் சிவஸ்மரணையில் ஈடுபட வேண்டும். இவற்றை எல்லா நாள்களிலுமே செய்யலாம் என்றாலும், மகாசிவராத்திரி நாளன்று செய்வது கோடி மடங்கு உயர்ந்த பலனைத் தரும் என்பது பெரியோர்களின் வாக்கு.

அன்று முழுவதும் உணவு உட்கொள்ளாமல் இருக்கவேண்டும். அவ்விதம் செய்ய இயலாதவர்கள் பால் – பழரசம் போன்ற திரவங்கள், பழங்கள் ஆகியவற்றை உட்கொள்ளலாம். கூடிய வரையில் அன்றைய தினம் பலகாரங்கள் உட்கொள்வதைத் தவிர்ப்பது நல்லது.

சிவராத்திரி நாளில் ஒரு முறை சிவ நாமஜபம் செய்வது, மற்ற நாள்களில் ஆயிரம் மடங்கு சிவ நாமஜபம் செய்த பலனைத் தரும்.

அன்றைய தினம் வீட்டில் நான்கு காலங்களிலும் சிவ பூஜை செய்ய வேண்டும்.

“சிவன் அபிஷேகப் பிரியர், அம்பிகை ஸ்தோத்திரப் பிரியை, விஷ்ணு அலங்காரப் பிரியர்” என்பது ஆன்றோர்களின் கருத்தாகும்.

எனவே சிவபூஜையில் அபிஷேகத்திற்கு எப்போதும் முக்கியத்துவம் உண்டு. நான்கு ஜாம பூஜைகளிலும் கங்கை நீரை அபிஷேகத்திற்குப் பயன்படுத்துவது சிறப்புக்கு உரியது.

மகாசிவராத்திரி நாளன்று சிவபெருமானை எந்த முறையில் பூஜிக்க வேண்டும் என்று சிற் சில வேறுபாடுகளுடன் சிவராத்திரி மகாபுராணம், காரணாகமம், சித்த தந்திரம், சிவபூஜை விதி போன்ற நூல்கள் குறிப்பிடுகின்றன. அவற்றைப் பின்பற்றி பின்வரும் பட்டியலையும் தந்திருக்கிறோம்.

விபூதி எனப்படும் திருநீற்றை நான்கு காலப் பூஜைக்குப் பயன்படுத்த வேண்டும்.

மேற்கூறிய முறையில் பூஜை செய்வதற்கு பக்தி சிரத்தையுடன் உண்மையாகவும், ஆத்மார்த்தமாகவும் முயற்சி செய்யவேண்டும்.

“சிவபூஜை முறைப்படி முயற்சி செய்தும் மகாசிவராத்திரி காலத்தில் நான்கு காலபூஜை செய்ய இயலாதவர்கள், தங்களால் இயன்ற வரையில் பூஜை, அபிஷேகம், நைவேத்தியம் செய்து சிவனை வழிபட வேண்டும்” என்று, நந்தியம்பெருமான் சிவமகா புராணத்தில் கூறியுள்ளார். இவ்விதம், ‘வசதிக்கேற்ப இயன்ற வரையில் செய்வது’ என்பதைத்தான் தற்காலத்தில் பெரும்பாலான மக்களால் பின்பற்ற இயலும்.

‘நான்கு கால பூஜை’ என்பதை, ‘நான்கு ஜாம பூஜை’ என்றும் கூறுவார்கள்.

‘ஜாமம்’ என்ற வடமொழிச் சொல்லைத் தமிழில் ‘யாமம்’ அல்லது ‘சாமம்’ என்று வழங்குகிறோம்.

ஒரு ஜாமம் என்பது மூன்று மணி நேரத்தைக் குறிக்கும். ஒரு ஜாமப் பூஜைக்கு மூன்று மணி நேரம் வீதம், நான்கு ஜாமப் பூஜைக்குப் பன்னிரெண்டு மணி நேரம் ஆகும்.

**இனியவை 40**

**“பிச்சை யெடுத்தாவது கற்பது இனிது. அப்படி கற்ற கல்வி நல்ல சபையில் உதவுவது மிக இனிது. முத்தையொக்கும் மகளிரது வாய்ச்சொல் இனிது. அதுபோல பெரியோர்களைத் துணையாகக் கொள்ளுதல் இனிது.”**

இவற்றில் முதல் மூன்று கால பூஜைகள் சக்தியின் அம்சம் உடையன என்றும், நான்காம் கால பூஜை சிவத்தின் அம்சம் உடையது என்றும் சொல்வார்கள். எனவே இந்த மகாசிவராத்திரி என்பது சிவசக்தி ஐக்கியமாகும்.

கிருதயுகத்தைக் குறிக்கும் முதல் கால சிவராத்திரி பூஜையை விநாயகர் செய்கிறார் என்பது ஐதிகம். எனவே அப்போது சிவபூஜை செய்பவர்களும், அந்தப் பூஜையில் கலந்துகொள்பவர்களும் விநாயகரின் பிரதிநிதிகளாக விளங்குகிறார்கள்.

திரேதாயுகத்தைக் குறிக்கும் இரண்டாம் கால பூஜையை முருகக் கடவுள் செய்கிறார் என்பது ஐதிகம். எனவே அப்போது சிவபூஜை செய்பவர்களும், அந்தப் பூஜையில் கலந்துகொள்பவர்களும் முருகக் கடவுளின் பிரதிநிதிகளாக விளங்குகிறார்கள்.

துவாபரயுகத்தைக் குறிக்கும் மூன்றாம் கால பூஜையை விஷ்ணு செய்கிறார் என்பது ஐதிகம். எனவே அப்போது சிவபூஜை செய்பவர்களும், அந்தப் பூஜையில் கலந்துகொள்பவர்களும் விஷ்ணுவின் பிரதிநிதிகளாக விளங்குகிறார்கள்.

கலியுகத்தைக் குறிக்கும் நான்காம் கால பூஜையை பிரமன், இந்திரன் முதலான தேவர்கள், கௌசிகர், காசியபர், பாரத்வாஜர், கௌதமர், வசிஷ்டர், அத்ரி, விஸ்வாமித்திரர், அகஸ்தியர் ஆகியோர் உட்பட ரிஷிகள் எல்லோரும் செய்கிறார்கள் என்பது ஐதிகம். எனவே அப்போது சிவபூஜை செய்பவர்களும், அந்தப் பூஜையில் கலந்துகொள்பவர் களும் மேலே குறிப்பிட்டிருப்பவர்களின் பிரதிநதிகளாக விளங்குகிறார்கள்.



இவ்விதம் நான்கு கால பூஜைகளிலும் கலந்துகொள்ளும் அன்பர்கள் தெய்வங்களின் பிரதிநிதிகளாகவும், ரிஷிகளின் பிரதிநிதிகளாகவும் விளங்குகிறார்கள். ஆதலால் அவர்கள் அதற்கு ஏற்ப தூயவர்களாகவும், சிவ சிந்தனைகள் கொண்டவர்களாகவும் இருப்பதற்கு இயன்ற வரையில் முயற்சி செய்ய வேண்டும்.

இந்த நான்கு கால பூஜை மாலை ஆறு மணிக்குத் தொடங்கி, மறுநாள் காலை ஆறு மணி வரையில் நடைபெறும்.

முதல் ஜாம பூஜையின் கடைசியில் ரிக் வேத பாராயணம், இரண்டாம் ஜாம பூஜையின் முடிவில் யஜுர் வேத பாராயணம், மூன்றாம் ஜாம பூஜையின் முடிவில் சாம வேத பாராயணம், நான்காம் ஜாம பூஜையின் முடிவில் அதர்வண வேத பாராயணம் செய்வது சிறப்பான நன்மைகளைத் தரும் என்பது பெரியோர்களின் கருத்தாகும். இந்த முறையில் வேத பாராயணம் செய்ய இயலாதவர்கள் தேவாரம் - திருவாசகம் போன்ற சிவன் தொடர்புடைய பாடல்களைப் பாடுவதாலும், சிவ நாமாவளிகள் - சுலோகங்கள் - ஸ்தோத்திரங்கள் போன்றவற்றைச் சொல்வதாலும் அதே சிவ புண்ணியப் பலனைப் பெறுவார்கள்.

நான்கு கால பூஜை செய்பவர்கள் முறையே அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு புருஷார்த்தங்களையும் அடைவார்கள்.

நான்கு கால பூஜைகளில் முதல் கால பூஜையின் பயனாக தூய பிறவியும், இரண்டாம் கால பூஜையின் பயனாக உலகில் புகழுடன் வாழும் வாழ்க்கையும், மூன்றாம் கால பூஜையின் பயனாக இனிய குரல் வளம் பெற்று உலகம் போற்றும் சங்கீத மேதையாகத் திகழும் வாழ்க்கையும், நான்காம் கால பூஜையின் பயனாக உயர்ந்த ஆன்மிக வாழ்க்கையும் கிடைக்கும் என்றும் சொல்வது உண்டு.

“முதல் கால பூஜையினால் நோய் நீங்கும். இரண்டாவது கால பூஜையினால் அமானுஷ்ய யோகசித்தி ஏற்படும். மூன்றாவது கால பூஜையினால் அஷ்ட ஐஸ்வர்யங்களும், நான்காம் கால பூஜையினால் மோட்ச சாம்ராஜ்ய சித்தியும் கிடைக்கும்” என்று மற்றொரு கருத்தும் வழங்கி வருகிறது.

நான்கு கால சிவபூஜையின் முடிவில், “சிவபெருமானே! பூஜை, மந்திரங்கள் போன்றவற்றை நான் அறியாதவன். இந்த எளியேன் செய்த பூஜையில் இருந்த குற்றங்களைப் பொறுத்து ஏற்றுக்கொள்ளுங்கள். உங்கள் திருவடிகளில் என்றும் மாறாத தூய பக்தி எப்போதும் எனக்கு இருக்கவேண்டும் என்று அருள் புரியுங்கள். என்னை எப்போதும் உங்களுடையவனாக வைத்திருங்கள்” என்பன போன்ற பிரார்த்தனைகளைச் செய்யவேண்டும்.

வீட்டில் சிவபூஜை செய்ய இயலாதவர்கள், சிவலாயங்களில் நடைபெறும் பூஜையில் சென்று கலந்துகொள்ளலாம்.

அன்றைய தினம் முறைப்படி எதையுமே செய்ய இயலாதவர்கள், இயன்ற வரையில் அதிக எண்ணிக்கையில் சிவநாம ஜபம் செய்ய வேண்டும்.

புறத்தில் இருள் சூழ்ந்திருக்கும் மகாசிவராத்திரி இரவில் சிவபூஜை செய்தால், அது நம்முள்



இருக்கும் அகஇருளை நீக்கிவிடும்.

நான்கு கால பூஜை முடியும் வரையில் உபவாசம் இருக்க இயலாதவர்கள், முதல் ஜாம பூஜை முடியும் வரையிலாவது (அல்லது, லிங்கோத்பவ காலம் வரையிலாவது) உபவாசம் இருக்கவேண்டும்.

நான்கு கால பூஜையில், இரவு 11.30 மணியிலிருந்து 1 மணி வரையில் உள்ள ஒரு முகூர்த்தம் என்று சொல்லப்படும் ஒன்றரை மணி நேரம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த நேரமாகும். இந்த நேரத்தில்தான் இறைவன் சிவலிங்க வடிவம் கொண்டார் என்பதால், இந்த நேரம் 'லிங்கோத்பவ காலம்' என்று சிறப்பாக அழைக்கப்படுகிறது.

இந்த நேரத்தில் சிவபூஜை நடைபெறும் இடத்தில் பிரமா, விஷ்ணு, மகேஸ்வரன் ஆகிய மும்மூர்த்திகளும் எழுந்தருளியிருக்கிறார்கள் என்பது ஐதிகம்.

இந்த லிங்கோத்பவ காலத்திற்கு 'விஸ்வரூப தரிசனம்' என்ற மற்றொரு பெயரும் உண்டு.

மகாசிவராத்திரி முழுவதும் உபவாசம் இருக்க இயலாதவர்கள், லிங்கோத்பவ காலம் வரையிலாவது உபவாசம் இருக்கவேண்டும் என்பது பெரியோர்களின் கருத்தாகும்.

நான்கு கால பூஜையும் முடிந்தபிறகு, பூஜையின்போது நைவேத்தியம் செய்யப்பட்ட பிரசாதங்களைக் காலையில் சிவனடியார்களுக்கு வழங்குவது என்ற மகேஸ்வர பூஜையைச் செய்ய வேண்டும்.

உபவாசம் முடிந்து காலையில் முதலில் உட்கொள்ளும் உணவிற்குப் 'பாரணை' என்று பெயர்.

மகாசிவராத்திரி விரதம் இருப்பவர்கள், மறுநாள் 'பாரணை' (சிவராத்திரி பூஜையின்போது நைவேத்தியம் செய்யப்பட்ட பிரசாதம் உட்கொள்ளும்) நாளன்றும், பகலில் உறங்கக்கூடாது என்று பெரியோர் கூறியுள்ளனர்.

பாரணைக்குப் பிறகு நீராடி வீட்டில் சிவபூஜை செய்த பின்னர், சிவன் கோயிலுக்குச் சென்று வழிபட வேண்டும். ●




# கடவுள் எப்போது வருவார்...?

**ச**ரணாகதி என்பது உதட்டளவில் இருக்கக் கூடாது. கடவுளிடம் முழுமையாகச் சரண் அடைய வேண்டும். இல்லாவிட்டால் பகவானின் கிருபையைப் பெற முடியாது.

ஒருமுறை துணிகளை வெளுக்கும் தொழில் செய்யும் ஒருவன் ஒரு பக்தனைக் கடுமையாக அடித்தான். அப்போது பக்தன் 'நாராயணா! நாராயணா!' என்று மட்டும் சொல்லி அலறினான். அப்போது ஸ்ரீமன் நாராயணன் வைகுண்டத்தில் லட்சுமி சமேதராக வீற்றிருந்தார். அவர் காதில் இந்தக் கூக்குரல் விழுந்தது. உடனே அவர் எழுந்து புறப்பட ஆயத்தமானார். தேவி அவரிடம் ''சுவாமி! தாங்கள் எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''தேவி! என் பக்தன் ஒருவன் பெரிய ஆபத்தில் இருக்கிறான். அவனை நான் அவசியம் காப்பாற்றி யாக வேண்டும்" என்று சொல்லிவிட்டு அவசரம் அவசரமாக நாராயணன் புறப்பட்டார். ஆனால், இரண்டு மூன்று அடி தூரம் சென்றதும், மீண்டும் திரும்பி வந்து அவர் தமது ஆசனத்தில் அமர்ந்து விட்டார். இதைப் பார்த்து லட்சுமி திகைத்தாள். "பிரபோ! இவ்வளவு விரைவில் திரும்பி விட்டீர்களே? ஏன்?" என்று கேட்டாள்.

நாராயணர் புன்புறுவல் பூத்தபடியே பதில் சொன்னார். "நான் போக வேண்டிய அவசியமே இல்லாமற் போனதை உணர்ந்தேன். அந்தப் பக்தன் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ள நினைத்து இப்போது அவன் தன்னை அடித்தவனைத் திருப்பி அடிக்கத் தொடங்கி இருக்கிறான். ஆகவே நான் அங்கே போய் செய்யவேண்டியது ஒன்றும் இல்லை. எனவே, அவசியம் இல்லாததால் நான் உடனே திரும்பி வந்துவிட்டேன்!'' என்று நாராயணன் சொல்லிவிட்டார்.

முற்றிலுமாக நீ உன்னைக் கடவுளிடம் ஒப்படைத்துவிட வேண்டும். அப்படி நீ செய்தாலன்றிக் கடவுள் உன்னைக் காப்பாற்ற மாட்டார்.

எவன் ஒருவன் கடவுளிடம் முற்றிலுமாகத் தன்னை அர்ப்பணித்துச் சரணாகதி அடைகிறானோ அவனை மட்டுமே பகவான் காப்பாற்ற முன் வருகிறார்.

**பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்**

# சைவம் என்னும் செல்வம்

ஒரு நாட்டின் செல்வங்களுக்கெல்லாம் தலையான செல்வம் அந்த நாட்டில் உள்ள மக்களே ஆவர். இன்றைய இளைஞர்களே நாளைய தினம் நாட்டை நடத்துபவர்களாக வருபவர்கள். எனவே ஒரு நாட்டின் சிறப்பும், செழிப்பும் நமது இளைஞர்களின் திறத்திலேயே இருக்கின்றன.

இன்று இளைய தலைமுறையினர்களிடம் சமய அறிவும், ஒழுக்க ஆர்வமும் குறைந்ததால் பெரிதும் குழப்பம் காணப்படுகிறது. சமயக் கோட்பாடுகளுக்கும், அறிவியல் உண்மைகளுக்கும் ஏதோ பெரிய மாறுபாடு இருப்பதுபோலச் சிலர் எழுதிக் கொண்டும் பேசிக் கொண்டும் இருக்கிறார்கள்.

"அறிவியல் இல்லாத சமயம் குருட்டுத்தன்மை உடையது. சமயம் இல்லாத அறிவியல் மூடத்தன்மை வாய்ந்தது" என்கிறார் அறிவியல் அறிஞர் ஐன்ஸ்டைன்.

நாம் சமய உணர்வை, சமயச் சான்றோர்களின் அரிய அனுபவ உண்மைகளை மக்களுக்கு அறிவுறுத்தத் தவறிவிட்டோம்.

சர் மானியர் வில்லியம்ஸ் என்ற பேரறிஞர் சைவ சித்தாந்தத்தைப் பற்றிக் கூறியிருப்பதாவது :

"சைவ சித்தாந்தம் எல்லா சமயங்களையும் ஏற்றுக்கொள்ளும் இயல்புடையது. எதையும் ஒதுக்காமல், இகழாமல் அணைத்துக் கொள்ளும் ஆற்றல் உடையது."

"உலகம் முழுவதும் ஏற்றுக்கொள்ளும் தகுதியுடன் கூடிய உலகச் சமயமாக விளங்கத் தக்கது. வேறு மதங்களின் வளர்ச்சியைக் கண்டு மயங்காதது. மாறாக அந்த மதங்களைத் தன்னோடு அணைத்துக் கொள்ளும் பெருந்தன்மையுடன் விளங்குவது. ஒவ்வொரு தனி மனிதரின் மனவளர்ச்சிக்கு ஏற்ப அவர்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டக் கூடியதாகச் சைவ சித்தாந்த நெறி வகுக்கப்பட்டு இருக்கிறது. அமைதியை நாடும் தனிமை விரும்பிகளுக்கு உரிய சாந்தி நலம் தரக்கூடிய சிந்தனைக் கூறுகளும் நிறைந்தது சைவ சித்தாந்த நெறி" என்று வியந்து போற்றுகிறார்.

சைவ சமயம் உலகம் எங்கும் பரவி இருந்த சமயம். இதற்கு எத்தனையோ சான்றுகளை எடுத்துக் காட்டலாம். சைவ சமயம் உலகின் மிகப் பழைமையான சமயம். உலகில் நாகரிகம் பெற்ற மக்கள் வாழ்ந்த பல பகுதிகளில் சிவலிங்க வழிபாடு இருந்திருக்கிறது. எகிப்து, சிரியா, பாரசீகம், ஆசியா, கிரீஸ், இத்தாலி போன்ற நாடுகளில் பல நூற்றாண்டுகளாக சிவலிங்க வழிபாடு இருந்து வந்திருக்கிறது. இன்றும் ஆப்பிரிக்கா கண்டத்தின் பல பகுதிகளில் சிவலிங்க வழிபாடு இருக்கிறது.



# சக்தி களஞ்சியம்

**நா.மகாலிங்கம்**



"ஸ்பெயின் நாட்டுக்காரர்கள் முதன் முதலில் அமெரிக்க நாட்டைக் கண்டுபிடித்து அங்கு குடியேறியபோது அங்கிருந்த மக்கள் சிவலிங்க வழிபாடு செய்து வந்ததைப் பார்த்தார்கள். அதை மிகுந்த பக்தி சிரத்தையுடன் அவர்கள் செய்து வந்தார்கள். சிவலிங்க வழிபாடு மனிதனை விலங்கு நிலையில் இருந்து மனித நிலைக்கும், மாமனித நிலைக்கும் உயர்த்தும் உன்னதமான வழிபாடு என்று அவர்கள் கூறிப் பெருமைப்பட்டார்கள்" என்று வரலாற்று ஆராய்ச்சி நிபுணர்களான சர் ஜான் மார்ஷல், எச்.எம். வெஸ்ட்ராப் இ.பி. டைலர், அலன்கிராண்டு முதலியவர்கள் சொல்லி வியக்கிறார்கள். ஆச்சர்யப்படுகிறார்கள்.

"பாரத நாட்டின் சைவ சமயத்தின் பரம்பொருளான சிவபெருமான் தம்முடைய ரிஷப வாகனத்தில் ஏறி, டமாரத்தை அடித்துக்கொண்டு உலகம் எங்கும் பவனி வந்திருக்கிறார்.

ஜாவா, சுமத்திரா, போர்னியோ, செலிபிஸ், ஆஸ்திரேலியா, அமெரிக்காவின் பல பகுதிகளுக்கும் சிவபெருமான் பிரயாணம் செய்திருப்பதற்கான அடையாளங்கள் இருக்கின்றன. அந்தப் பகுதிகளில் சிவலிங்க வழிபாடுகள் நடைபெற்று வந்திருக்கின்றன.

இதுபோலவே திபெத், ஜப்பான், சைபீரியா போன்ற நாடுகளில் அங்குள்ள மக்கள் சிவலிங்க வழிபாடு செய்திருக்கிறார்கள் என்பதை பல அறிஞர்கள் கண்டு சொல்லி இருக்கிறார்கள்" என்று சுவாமி விவேகானந்தர் சொல்கிறார். லண்டனில் இருந்து வெளியாகும் 'நியூஸ் ரெவ்யூ' என்ற பத்திரிகையில் 1937-ம் ஆண்டில் வெளியாகி இருந்த ஒரு வியக்கத்தக்க செய்தியைப் பாருங்கள்.

அமெரிக்காவின் ஏழாவது பெரிய மாகாணமாக விளங்குவது கொலராடோ. இது மலைகள் சூழ்ந்த இயற்கை வளம் கொஞ்சும் மாகாணம். இந்த மாகாணத்தில் மறைந்துபோன உலகை மீண்டும் கண்டு பிடித்திருக்கிறோம் என்று அமெரிக்காவின் தொல்பொருள் ஆய்வாளர்களும், வரலாற்று நிபுணர்களும், விஞ்ஞானிகளும் சேர்ந்து ஒரு கட்டுரையை வெளியிட்டிருக்கிறார்கள்.

இதில் 'இருபதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்த நிலப் பகுதியில் ஓடிக்கொண்டு இருந்த ஆற்றில் பெரிய வெள்ளப்பெருக்கு ஏற்பட்டது. அதன் காரணமாக நாகரிகம் பெற்ற மக்கள் வசித்த நகரமும். அதன் எல்லையில் இருந்த மலைப் பகுதியும் துண்டிக்கப்பட்டன. மலைப் பகுதிகளுக்கும் மக்கள் வசித்த பகுதிகளுக்கும் இடையில் ஒன்பதாயிரம் சதுர அடி நிலப்பகுதி மறைந்துவிட்டது. இந்த மறைந்த நிலப்பகுதிக்கு அப்பால் இருக்கும் மலை மீது அரை சதுர மைல் பரப்பளவு உள்ள கலை கொஞ்சும் சிவன் கோயில் ஒன்றைக் கண்டோம். மறைந்துபோன ஒரு நாகரிக உலகத்தைக் கண்டுபிடித்திருக்கிறோம்" என்று அந்த சிவ ஆலயத்தின் படத்தையும் அதில் இருக்கும் சிற்பங்களையும் விக்கிரகங்களையும் வெளியிட்டு இருந்தார்கள். அவை அப்படியே நமது தென்னாட்டுச் சிவன் கோயில்களைப் போல் காட்சி அளித்தன.

சிந்துவெளியில் அகழ்ந்து புதைபொருளைக் கண்ட ஆராய்ச்சியாளர்கள் ஐயாயிரம்

ஆண்டுகளுக்கு முன்பே இந்த நாட்டில் பரவி இருந்த நாகரிகத்தில் சிவலிங்க வழிபாடும், சிவபெருமான் வாகனமாகிய ரிஷபமும் இருந்தது தெரிய வந்திருக்கிறது என்று சொல்லி வியக்கிறார்கள். உலகத்திலும், இந்தியாவிலும் பழைய சமயமாக விளங்கியது சைவ சமயம் என்பதை இந்தச் செய்திகள் உறுதிப்படுத்துகின்றன.

சமயமும், அறிவியலும் ஒன்றை ஒன்று தழுவி நிறைவுபெற வேண்டியவை. இரண்டும் மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை.

அரசியல் துறையில் ஈடுபட்டு உயர விரும்புபவர்கள் சமய உணர்வால் முன்னேற்றம் தடைப்படுமோ என்று பயப்படுகிறார்கள்.

நம் கண் முன்னாலேயே காந்தியடிகள் சமய உணர்வின் மூலமாகவே அரசியலில் உலகம் வியக்கும் மகத்தான அற்புதத்தை நடத்திக் காட்டி இருக்கிறார். நாட்டுப் பற்றும், மொழிப் பற்றும் ஒரு மனிதனுக்கு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் சமயப் பற்றும் என்பதை நாம் உணர வேண்டும்; மக்களுக்கு உணர்த்த வேண்டும்.

மொழி, மக்களின் எண்ணங்களுக்கும், அதன் வெளிப்பாட்டு முறைகளுக்கும் உயிர் கொடுப்பது, சமய உணர்வோ மக்களின் வாழ்க்கைத் துறை அனைத்திற்கும் ஆக்கம் கொடுக்கக் கூடியது.

ஒரு நாட்டின் நாகரிகம், பண்பாடு, பிற எல்லாச் செல்வங்களும் அது வளர்க்கும் உன்னதமான சமய நெறிகளால் உருப்பெற்று சுடர்விட்டு ஒளிவிடுகின்றன.நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் நம்மிடம் சமய உணர்வு இயல்பாகவே அமைந்திருக்கிறது.

குறித்த பருவத்தில் ‘பால் உணர்வு’ ஏற்படுவதுபோல கடவுள் உணர்ச்சியும் சயம ஒழுக்கமும் எப்போதாவது ஒரு சமயம் ஒவ்வொரு வருக்கும் வந்தே தீரும். அது தவிர்க்க முடியாதது.

"கடந்த முப்பது ஆண்டுகளாக உலகின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த மக்கள் என்னிடம் பல சந்தேகங்களைக் கேட்டு வருகிறார்கள். நான் பார்க்கும் நோயாளிகளில் நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களிடம் ஓர் உண்மையைக் காணுகிறேன். அவர்களிடம் சமய உணர்வு இல்லை. அவர்கள் நோயுற்றுக் கஷ்டப்படுவதற்குக் காரணம் சமய உணர்வு தரும் அமைதி; மனநிறைவை அவர்கள் பெறவில்லை. அவர்கள் சமய உணர்வையும், கடவுள் நம்பிக்கையையும் மீண்டும் பெற்று, அதில் நம்பிக்கையுடன் தங்கள் வாழ்க்கையை நடத்தும்போதுதான் அவர்கள் நோய் நீங்கி, அவர்கள் வாழ்க்கையில் அமைதி



யைப் பெறுகிறார்கள்" என்று தம் அனுபவத்தைத் தெளிவாகக் கூறுகிறார் உலகப் புகழ்பெற்ற உளஇயல் அறிஞர் பேராசிரியர் சி.ஜி.யுங்.

சைவ சமயம் இந்தியாவில் அனாதி காலமாக வழங்கிய சமயம். அது அன்று முதல் இறை வழிபாடு மட்டும் செய்யும் சமயமாக இல்லாமல், மக்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளையும் செம்மைப்படுத்திய, மனிதனை மாமனிதனாக உயர்த்தக்கூடிய வாழ்க்கை நெறியாகவே இருந்து வந்திருக்கிறது.

சைவ சமயம் யாரோ ஒருவரால் உருவாக்கப்பட்ட சமயம் அல்ல. சங்கரரின் அத்வைதம், ராமாநுஜரின் விசிஷ்டாத்வைதம், மத்வரின் துவைதம் என்று சொல்வதுபோல சைவ சமயத்தின் முடிவான சுத்தாத்வைதத்தை ஓர் ஆசிரியரின் பெயரைக் குறிப்பிட்டுச் சொல்லவில்லை. காரணம் சைவ சமயத் தோற்றம் வரலாற்றுக்கும் எட்டாது இருப்பதுதான்.

இருந்தாலும் காஷ்மீர சைவம் என்றும், கன்னட நாட்டு வீரசைவம் என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. வசுகுப்தர், கல்லாடர், சோமானந்தர், உத்பலாச்சாரியர், அபிநவகுப்தர் போன்ற அறிஞர் பெருமக்களால் காஷ்மீர நாட்டில் பரப்பப்பட்டது காஷ்மீர சைவம்.

பசவேசுவரர், சென்ன பசவேசுவரர், சித்தராமையர், அல்லமாப் பிரபு, அக்கமகாதேவி போன்ற அறிஞர்களால் வளர்க்கப்பட்டது கன்னட நாட்டு வீரசைவம். தமிழ்நாட்டில் சமய ஆசார்யர்களாலும், சந்தான ஆசார்யர்களாலும் பரப்பி வளர்க்கப்பட்டது சைவ சித்தாந்தம். சமய ஆசார்யர்கள் ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வர்.

சந்தான ஆசார்யர்கள் மெய்கண்டார், அருள்நந்தி, மறைஞானசம்பந்தர், உமாபதி சிவாசார்யார் ஆகிய நால்வர்.

சமயாசார்யர்கள் நால்வரும் ஏழு, எட்டு, ஒன்பது நூற்றாண்டுகளில் சைவத்தை வளர்த்தவர்கள். சிறப்பாக பக்தி மார்க்கத்தைத் தமிழ்நாட்டில் வளர்த்தார்கள்.

உலகுக்கு ஒரே தெய்வம். அந்த தெய்வம் சிவம். அந்த தெய்வத்தை வழிபட்டு தங்கள் வினைகளில் இருந்து நீங்கி உரிய காலத்தில் இறைஅருளைப் பெறலாம் என்பதே இவர்களுடைய பொதுவான உபதேசம்.

சைவ சமயம் பிறரைப் பழிக்காதது. நிலையாமையைப் பற்றிப் பேசாதது. ஊர் ஒன்றுதான்; அதற்கு வழிகள் ஆறு இருக்கின்றன. ஆறுவித சமயங்களும் இறைவனை அடைவதற்கு வெவ்வேறு வழிகளே. பசுக்கள் பல நிறங்களில் இருக்கலாம். அவற்றின் பால் வெண்மையாகத்தான் இருக்கும். சமயங்கள் பலவாக இருந்தாலும், அவை கூறும் முடிவான பொருள் ஒன்றுதான். இவை சைவ சாத்திரம் கூறும் சில கருத்துக்கள்.

அருள்மயமாக நம் வாழ்க்கை வளம் பெறும்போது இறைவனே தம் அருளை நமக்கு வழங்குகின்றான். இறைவன், உயிர், உலகம் அதாவது பதி, பசு, பாசம் என்ற மூன்றும் அழியாதவை; அனாதியானவை என்பதுதான் சைவத்தின் சித்தாந்தம்.

சைவத்தில் மற்றொரு தனிச்சிறப்பு சைவம் பெண் குலத்துக்கும் பெருமை தருவது. சாதி வேறுபாடு அற்றது. நாயன்மார்கள் வரலாற்றில் இந்த உண்மைகளைக் காணலாம்.

சமண சமயத்தில் பெண்ணுக்கு முத்தி நிலை எய்துவதற்கு உரிமை இல்லை. அடுத்த பிறப்பில் ஆணாகப் பிறந்துதான் முத்தி நிலை பெறுவதற்கான யோக்யதையை அவர்கள் அடைய முடியும் என்பது சமண சமயத்தின் கொள்கை.

இந்த நாட்டில் சைவ சமயம் மட்டுமே பிற சமயத்தினரைத் தன் கூட்டத்தில் சேர்க்க முயலாத சமயம். காரணம் ஆதிகாலத்தில் இந்த நாட்டில் இருந்த ஒரே சமயம் சைவ சமயம்.

சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய சமயங்கள் சமணமும் பௌத்தமும். இந்தச் சமயங்கள் புதிதாகத் தோன்றியபோது இந்த மதத்தில் சேர்ந்தவர்கள் சைவ சமயத்தினர்.

சமணத்தின் ஆட்சியையும், அதன் ஆற்றலையும் அடக்கியவர் சம்பந்தர். மதமாற்றம் என்றுமே சைவ சமயத்தின் நோக்கமல்ல.

பிற்காலத்தில் கத்தியின் மூலமாகவும், பணம், பதவிகள் மூலமாகவும், வேறு வகையிலும் மதமாற்றம் செய்யப்பட்டவர்களும் சைவர்கள்தான்.

எனவே இந்த நாட்டில் சைவம் ஒன்றே தாய்ச் சமயம் என்பதை நன்கு உணரலாம்.

# முருகனின் அழகை விவரிக்கவும் இயலுமோ?



முருகன் எழுந்தருளும் தோற்றத்தைச் சொல்லிப் புகழத் தமிழில் வார்த்தைகள் உள்ளனவா என்ன?

எப்படிக் கடல் நீரை கைகளால் அள்ளித் தீர்த்துவிட முடியாதோ அப்படிக் கந்தனின் எழிலை வார்த்தைகளால் சொல்லி வர்ணித்துவிட முடியாது. இதை அறியாதவரா நக்கீரர்? ஆனாலும் தன்னால் இயன்ற அளவு அதை முயற்சிக்கிறார். அழகன் பெருமையினைச் சொல்ல விழைகிறார்.

முருகனுக்கு முன்பாக தழை ஆடை அணிந்த பெண்கள் கூடி நிற்கிறார்கள். அவன் புகழ் பாடி நிற்கிறார்கள். அவன் தோன்றப்போகிறான். வானில் சூரியன் தோன்றுவதுபோல பிரகாசமாகத் தோன்றப்போகிறான். அவனை வரவேற்க வானவர்கள் தயாராவதை விட இந்த மலைக்குறவர்கள் தயாராகி நிற்கிறார்கள். அவனும் இசைவோடு வந்து எழுந்தருள்கிறான்.

செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்

செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்

முருகப் பெருமான் செய்யன் - சிவந்த மேனியை உடையவன். அவன் தந்தையான சிவபெருமானும் பொன்னார் மேனியன் தானே... சிவந்த மேனியை உடைய அவன் தன் மேனியில் செந்நிற ஆடையை அணிந்திருக்கிறான். பார்ப்பதற்கு செந்நிறப்பிழம்பு போல இருக்கிறான்.

# அழகன் முருகனின் ஆற்றுப்படை

காயத்ரி கணேஷ் | படங்கள்: கே.எம்.பிரசன்னா

சிவனும் செம்பிழம்புதான். ஆனால் யானைத் தோலை இடையில் அணிந்தவர், அவர் நிறத்தில் அது ஒன்றித் தெரியாது தனித்துத் தெரியும். ஆனால், முருகப் பெருமானோ சிவப்பையே தனக்குகந்த நிறமாகக் கொண்டிருக்கிறான்.

தத்துவப்படி நாம் ஜீவாத்மா... நம்முள் இருக்கும் உயிர் பரமாத்மா. அது அந்த சிவன். ஆனால் உயிர் உடலெங்கும் வியாபித்திருக் கிறது. எப்படித் தெரியுமா? குருதியாக... இந்த உலக உயிர்களின் இயக்கத்துக்கெல்லாம் துணை செய்வது அவற்றின் உடலில் பாயும் ரத்தமே. அந்த செந்நிறக் குருதியாகத் திகழ்பவன் முருகப்பெருமான். சிவன் நிலைத்து நிற்கும் சக்தி என்றால் முருகப் பெருமான் பாய்ந்து வந்து காக்கும் சக்தி.

கிரகங்களில் செவ்வாய்தான் மனித உடலில் குருதிக்கு அதிபதி என்கிறது ஜோதிட சாஸ்திரம். அந்த செவ்வாய்க்கே அதிபதி முருகப்பெருமான். செவ்வாய் தோஷம் தீரச் செய்ய வேண்டிய வழிபாடு முருகப்பெருமான் வழிபாடு. இப்படி ஆருடமும் ஆன்மிகமும் கலந்து நிற்கும் சந்நிதி அவன் சந்நிதி. அவன் பன்னிரு செவிகளை உடையவன். அவை, செம்மையான அசோகா மரத்தின் குளிர்ந்த தளிர் இலைகளைப் போன்று தோற்றம் தருபவை என்கிறார் நக்கீரர்.

திருமுருகாற்றுப்படையில் ஒவ்வொரு சொல்லையும் உவமையையும் தேடித் தேடிப் பயன்படுத்துகிறார் நக்கீரர். சிவபெருமான் அக்னிப் பிழம்பு. மாசுகளும் தூசுகளும் அக்னியை நெருங்க முடியாது. ஆனால் அவரின் வாரிசான முருகப்பெருமானும் அக்னியிலிருந்து தோன்றியவர்தான். அக்னியின் தகிப்பு அவரிடம் இல்லை. அருள்வதற்காகப் பிறந்தவன் என்பதால் அவனில் குளுமை கூடியிருக்கிறது.

தம்மில் பிழையுள்ள பக்தர்கள்கூட அவனை நோக்கி ஓடிவரலாம். அவன் தரிசனம் கண்டு தூய்மையடையலாம். அவர்கள் தங்களின் குறைகளை முறையிட்டால் அவன் தன் குளிர்ந்த தளிர்போன்ற மென்மையான காதுகளால் அவற்றைக் கேட்டு அருள்வான். அவனிடம் சொல்லும்போதே அந்தக் குறைகள் நீங்கிவிடும். அப்படிப்பட்ட அருள் நிறைந்த




சந்நிதியாகத் திகழ்வது முருகப்பெருமானின் சந்நிதி.

**கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்**

**குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்**

தன் இடுப்பில் கச்சை கட்டிக் காலில் கழல் அணிந்து வெட்சிப்பூவைச் சூடியிருக்கும் முருகன் மாபெரும் வீரன் மட்டுமல்ல... மாப்பெருங்கலைஞனும் கூட.

ஏன் இறைவன் கலைஞனாகவும் இருக்க வேண்டும்? கலைஞன், மென்மையான மனதை உடையவன். இந்த உலகை மகிழ்விக்கும் தொழிலைச் செய்பவன். கவலைகளை மறக்கச் செய்து களிப்பூட்டுபவன். எனவே, இறைவன் கலைஞனாகவும் இருக்கிறான். ஏன் அவன் தந்தையே நடனமாடி அருளும் நடராஜன்தானே...

முருகப்பெருமான் புல்லாங்குழலை இசைப்பவன். புல்லாங்குழல் இந்த உடலின் உவமை. துவாரங்கள் உடைய இந்த உடலின் துளை வழியாக உயிர் வளி ஊதப்படுகிறது. அப்போது பிறக்கும் இசைதான் இந்த வாழ்க்கை. ஊதுபவன் காற்றை ஊதும்வரைதான் வாழ்க்கை. அவன் நிறுத்திவிட்டால் வாழ்க்கையும் நின்றுவிடும். இதை உணர்த்தத்தான் கண்ணனும் கந்தனும் புல்லாங்குழலோடு காட்சி தருகிறார்கள்.

நாமெல்லாம் கண்ணனைப் புல்லாங்குழலோடு கண்டு பழகிவிட்டோம். கந்தனை குழல் இன்றி விட்டுவிட்டோம். ஆனால், ஆதிக் கலைஞன் நம் கந்தன். அவன் புல்லாங்குழல் மட்டுமல்ல கோடு என்னும் ஊதாங்குழலையும் கொம்பு என்னும் குழலையும் இதுபோன்று பல்வேறு இசைக்கருவிகளையும் இசைக்கத் தெரிந்த கலைஞன். நக்கீரர் அதைச் சொல்லிப் போற்று கிறார். அதையே நக்கீரர், 'குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்' என்று பாடுகிறார்.

**தகரன் மஞ்ஞையன் புகர்இல் சேவல்அம்**

**கொடியன் நெடியன் தொடிஅணி தோளன்**

**நரம்பு ஆர்த்தன்ன இன்குரல் தொகுதியொடு**

தகரன் என்றால் ஆட்டின் மீது வலம் வருபவன் என்றுபொருள். முருகப்பெருமானுக்கு வாகனம் பல. பலரும் அறிந்தது அவன் மயில்வாகனன் என்பது. ஆனால் அவனுக்கு ஆடு ஒரு வாகனம், யானை ஒரு வாகனம், மயில் மற்றொரு வாகனம். ஆடு என்பது அகந்தையின் அடையாளம். 'மே' என்றால் எனக்கு என்று பொருள். ஆடுபோல எனக்கு எனக்கு என்று அலையும் உயிர்களின் அகந்தையை அடக்கி அறிவாக விளங்குபவன் முருகன்.

மயிலோ எழில் நிறைந்தது. அவன் அழகன் என்பதன் அடையாளமானது. யானையோ வலிமையின் சின்னம். அவனுக்கு நிகரான வலிய தெய்வம் இந்தப் புவியில் இல்லை என்பதால் யானை அவன் வாகனம் ஆனது.

நக்கீரர் முருகனை தகரன் - ஆட்டின் மேல் அமர்ந்தவன்; மஞ்ஞையன் - மயிலின் மேல் அமர்ந்தவன்; புகரில் சேவலங்கொடிய னெடியன்- குறைவில்லாத சேவற்கொடியை உடைய நெடிய தோற்றம் கொண்டவன்; வளை என்னும் அணிகலன்களை அணிந்த தோள் களை உடையவன் என்று அவன் தோற்றத்தை வருணித்துப் புகழ்ந்து பாடுகிறார் நக்கீரர்.

அப்படிப்பட்ட அழகன் அழகிய நரம்பால்












செய்யப்பட்ட இசைக்கருவிகளை மீட்டினார் போன்ற இனிய இசையை எழுப்பும் மகளிர் முன்பாக எழுந்தருள்கிறான்.

**குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்**
**மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்**
**முழவுறழ் தடக்கையி னியல வேந்தி**
**மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து**
**குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே யதாஅன்று.**

சின்னச் சின்னப் புள்ளிகளைத் தன் ஆடையில் அலங்காரமாகக் கொண்ட நறுமணம் கமழும் ஆடையைத் தன் இடுப்பில் அணிந்தவன் முருகப்பெருமான். அப்படிப்பட்ட முருகனின் முன்பாக நின்று மகளிர் இசைக்கிறார்கள். தன் பெரிய விசாலமான கைகளைக் கொண்டு மென்மையான மான்களைப் போன்ற தோள்களை உடைய மகளிரைத் தடவி அவனின் அருளாசியை வழங்கி அருள்பவன். அப்படிப்பட்ட அந்த முருகப்பெருமான் குன்றுதோறும் நின்று இத்தகைய திருவிளையாடல் செய்பவன். இதுதான் அவன் பண்பு என்று பாடுகிறார் நக்கீரர்.

தமிழ் நிலத்தில் குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம். குமரனை – முருகனை – குகனைக் குன்றுதோறும் சென்று வணங்கி வழிபட்டு அடுத்த தலமான சோலைக்குச் சென்று வழிபடலாம் என்கிறார் நக்கீரர். அடுத்த தலம் அழகர் மலை. அழகன் முருகன் அமர்ந்திருந்து அருளும் மலை. வாருங்கள் அந்த எழில் மலையை – சோலை மலையை தரிசனம் செய்து மகிழ்வோம்.

**–அடுத்த இதழில்**

# ராமகிருஷ்ண பரமஹம்சரின் வாழ்க்கையில்...

குருதேவர் பரவச நிலையில் இருக்கும்போது பல அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறார். அவற்றுள் தன்னை முன்னிருத்தி நிகழ்த்திய ஓர் அற்புத நிகழ்வு இங்கே...

ஒருநாள் மாலை. சூரியன் மறைந்து ஏறக்குறைய மூன்று மணிநேரம் ஆகியிருக்கும். வந்திருந்தோர் ஒவ்வொருவராக விடைபெற்று வீடு திரும்பினர். குருதேவர் சில நாள்களாக வயிற்றுக் கோளாறினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். இரவில் பார்லிக் கஞ்சி தவிர வேறு எதுவும் உண்ண முடிவதில்லை. அன்றிரவும் பாலும் பார்லிக் கஞ்சியும் அருந்திவிட்டு படுக்கச் சென்றார். பெண்கள் உணவு உண்டு, வீட்டு வேலைகளையும் முடித்துவிட்டுப் படுக்கத் தயாராகிக் கொண்டிருந்தனர்.

அப்போது குருதேவர் திடீரென்று தமது அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியில் வந்தார். பரவச நிலையில் இருந்ததால் தள்ளாடியபடியே வந்தார். ராம்லாவின் தாயையும், மற்றவர்களையும் பார்த்து, 'நீங்கள் படுக்கப் போகிறீர்களா? எனக்கு உண்ண எதுவும் தராமல் படுக்கவா போகிறீர்கள்?' என்று கேட்டார். ராம்லாலின் தாய்க்குத் திக்கென்றது. 'அடக்கடவுளே, என்ன சொல்கிறீர்கள்? இதோ, இப்போதுதானே சாப்பிட்டீர்கள்' என்றார் அவர். குருதேவரோ, 'நான் சாப்பிட்டேனா? எப்போது சாப்பிட்டேன்? இப்பொழுதுதான் தட்சிணேசுவரத்திலிருந்து வந்திருக்கிறேன். எப்போது எனக்கு உணவளித்தீர்கள்?' என்று கேட்டார்.

பெண்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தபடியே மலைத்து நின்றார்கள். பரவச நிலையில்தான் குருதேவர் இவ்வாறு பேசுகிறார் என்பதை உணர்ந்துகொண்டனர். ஆனால், அவர்களால் என்ன செய்ய முடியும்? உண்பதற்கு அந்த நேரத்தில் வீட்டில் எதுவும் இல்லை. என்ன வழி? ராம்லாவின் தாய் தயங்கியபடியே சொன்னார்: 'இப்போது வீட்டில் பொரியைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. சிறிது பொரி சாப்பிடுங்கள். அது வயிற்றுக்கும் நல்லது என்று சொல்லி, தட்டு ஒன்றில் பொரியை எடுத்து வந்து குருதேவர்முன் வைத்தார். அதைக் கண்ட குருதேவர் ஒரு சிறுவனைப்போல கோபத்துடன் திரும்பி உட்கார்ந்துகொண்டு, 'வெறும் பொரியை நான் சாப்பிட





## பிப்ரவரி – 18
## ஸ்ரீ ராமகிருஷ்ணர் பிறந்த தினம்

மாட்டேன்' என்றார். அதற்கு ராம்லாலின் தாய், 'உங்களுக்கு வயிறு சரியில்லை. வேறெதுவும் ஒத்துக் கொள்ளாது. அது மட்டுமின்றி, இந்த இரவில் எந்தக் கடை திறந்திருக்கும்! எனவே பார்லியோ வேறு எதுவுமோ வாங்க முடியாது. இப்போது இந்தப் பொரியைச் சாப்பிடுங்கள். நாளை காலை எழுந்தவுடன் சாதமும் காய்கறிக் கூட்டுகளும் சமைத்துத் தருகிறேன்' என்றார். ஆனால் இதையெல்லாம் யார் கேட்பது? அடம்பிடிக்கும் சிறுவனைப் போல் மீண்டும்மீண்டும், 'நான் இதைச் சாப்பிட மாட்டேன்' என்று கூறிக்கொண்டே இருந்தார் குருதேவர்.

வேறு வழியில்லை. எனவே ராம்லால் கடைக்குச் சென்று, தூங்கிக் கொண்டிருந்த கடைக்காரனை எழுப்பி ஒரு சேர் இனிப்பு வாங்கி வந்தார். அந்த இனிப்புடன் சாதாரணமாக ஒருவருக்குப் போதுமானதைவிட அதிக அளவு பொரியையும் ஒரு தட்டில் வைத்து குருதேவருக்குக் கொடுத்தார்கள். குருதேவர் முகமலர்ச்சியுடன் உண்ண அமர்ந்தார். சிறிதும் மீதி வைக்காமல் எல்லாவற்றையும் உண்டுவிட்டார். வீட்டில் எல்லோருக்கும் பயம். தீராத வயிற்றுத் தொல்லை, மாதத்தில் பாதி நாள்களுக்கு பார்லிக் கஞ்சி மட்டுமே உணவு. இந்த நிலையில், இந்த ராத்திரியில் இவ்வளவு உணவையும் உண்கிறாரே! நாளை பெருங் குழப்பம்தான், வேறென்ன என்று எண்ணினார்கள். ஆனால் என்ன விந்தை! மறுநாள் அவர் நன்றாக இருந்தார், உணவின் காரணமாக அவருக்கு எந்தத் துன்பமும் நேரவில்லை. ●

# தெய்வ மூலிகைகள் 9

நரை, திரை, மூப்பு, பிணி இவை எதுவும் இல்லாமல் நீண்ட காலம் வாழவேண்டும் என்பதே பலரின் ஆசை. அதற்கு உதவும் ஒப்பற்ற கற்பமூலிகை அழுகண்ணி. இதை முறையான வகையில் சாப்பிட்டு வரும்பொழுது உடலில் வெட்டுப்பட்ட பாகங்கள் ஒட்டிக்கொள்ளும் அதிசயம் எல்லாம் இந்த மூலிகையால் நடைபெறும் என சித்தர்கள் கூறுகின்றனர்.

ஓரடி மட்டுமே வளரும் பூண்டு வகையைச் சேர்ந்த ஒரு வகை குத்துச்செடி இது. இதன் இலை தடிமனாகவும் வழுவழுப்பாகவும் இருக்கும். இதன் இலையின் மேல் பனித்துளி போல் நீர் கசிந்து வெளியாகிக் கொண்டே இருக்கும். இந்தச் செடிக்கு அடியில் எப்போதும் ஈரப்பதம் இருக்கும். அழுகண்ணி செடியின் நீரானது இனிப்புச் சுவையுடன் இருக்கும் என்பதால் இந்தச் செடியைச் சுற்றி எறும்புகள் மொய்த்துக் கொண்டே இருக்கும். இதன் இலைகள் பலாச்சுளை போல் இருக்கும். பூ மஞ்சள் நிறமாகவும், காய் செந்தட்டிக்காய் போலவும் இருக்கும்.

ஆயுள் விருத்தி, ருதந்தி, சாவல்யகரணி, ஆரோக்கிய விருத்தி, ஜீவசக்தி மூலிகை என்றெல்லாம் இது அழைக்கப்படுகின்றது. சதுரகிரி மலை, வெள்ளியங்கிரி மலையில் இது பெருமளவில் காணப்படுகின்றது. அழுகண்ணிச் செடியின் இலைகளை, உடலில் வெட்டுக் காயம் உண்டான இடத்தில் வைத்து கட்டினால் வெட்டுப்பட்ட இடம் ஒன்று சேர்ந்துவிடும் என்பது சித்தர்கள் கூறும் தகவல். வியாதிப்புண், சர்க்கரை வியாதிப்புண், வெட்டுப்புண் போன்றவற்றை குணப்படுத்தும் தன்மை கொண்டது இந்த மூலிகை.

தொட்டவுடன் கைகூப்பும் வணக்க இலைச் செடி இது. இதனால் இந்தச் செடியே சித்தர்களின் அம்சமாகப் போற்றப்படுகிறது. இதை வணக்கத்துடன் காப்பு கட்டி. சாபம் போக்கி கொய்ய வேண்டும். பிறகு வேரைக் காய வைத்து இடித்து பொடி செய்து வைத்துக்கொண்டு சுத்தமான வஸ்திரத்தில் முடிந்து வஸ்திர காயம் செய்து பிறகு ஒரு மண் சீசாவில் பதனம் செய்யவேண்டும். இதை தேனில் குழைத்துக் காலை மாலை என இரு வேளையும் 40 நாள்கள் சாப்பிட்டு வந்தால், உடல் வஜ்ஜிரமாகும். ஆயுதங்கள் கூட ஒன்றும் செய்ய முடியாத அளவில் உடல் கெட்டிப்படும். மேலும் நரை, திரை, மூப்பு நீங்கி இளமை திரும்பும்.

யானை போன்ற வலிமையும் அருணன் போன்ற அழகும் வெகுகாலம் கெடாத தேகமும் கிட்டும் என்று காலாங்கிநாத சித்தர் கூறுகிறார். வேரை சூரணித்து பசு நெய்யுடன் கலந்து 40 நாள்கள் சாப்பிட்டு வந்தால் உடல்

மு.அரி



# ஆயுளும் ஆரோக்கியமும் அள்ளித் தரும் அழுகண்ணி மூலிகை!

மினுமினுக்கும் என்கிறார்கள் சித்தர்கள். தாதுபுஷ்டி, தேகபுஷ்டி அளிக்கும் அபூர்வ மூலிகை இது.

இந்த மூலிகையை பஸ்பமாகவோ, லேகியமாகவோ தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் இளமை கூடும். முக தேஜஸ் பெருகும் எனப்படுகிறது. வடக்கு நோக்கிப்போகும் இதன் வேரை எடுத்து பதப்படுத்தித் தங்கத்தால் தாயத்து செய்து அதனுள் இந்த வேரை வைத்து, லட்சுமிக்கு பூஜை செய்து வலது புஜத்தில் கட்டிக் கொண்டால் சகல காரியமும் சித்தியாகும் எனப்படுகிறது. மேலும் லட்சுமி கடாட்சம் உண்டாகும், தொழில் விருத்தி, வியாபார விருத்தி உண்டாகும் என்கிறார்கள். அழுகண்ணி, தொழுகண்ணி இணைத்து செய்யப்படும் மந்திர உரு சகல தடைகளையும் உடைக்கும் என்றும் நம்பப்படுகிறது. அழுகண்ணி சித்தர் என்ற மாபெரும் சித்தபுருஷர், இந்தச் செடியை பயன்படுத்தி பெரும்பலன்களைப் பெற்று பலரையும் வாழ்வித்தார் எனப்படுகிறது.

இது ஒவ்வாமை அளிக்கும் என்பதால் தகுந்த மருத்துவரைக் கேட்டே இந்த மருந்தை எடுத்துக் கொள்ள வேண்டும். தெய்விக மூலிகை என்பதால் பயபக்தியோடு கையாள வேண்டும். லட்சுமி கடாட்சம் மிகுந்த மூலிகை என்பதால் இந்தச் செடியைக் கண்டாலும் இதை மருத்துவர்கள் அல்லாதவர்கள் கொய்யக் கூடாது. காரணம் இதைக் கொய்யவே பல நியதிகள் உள்ளன. அதைக் கடைப்பிடிக்கா விட்டால் பெரும் சாபத்தில் வீழ்வோம் என்றும் சித்த நூல்கள் கூறுகின்றன.

●

கமலா நடராஜன் | ஓவியம்: ஸ்யாம்



சக்தி களஞ்சியம்

இரவு ஏழரை மணி வண்டியில் சென்னையிலிருந்து ராமநாதன் வருகிறார். ஐந்து வருடங்களுக்குப் பின் சத்யனுக்கு அவரைச் சந்திக்க ஒரு வாய்ப்பு!

தன் வீட்டில் இரண்டு நாள் விருந்தினராக அவர் தங்கி இருக்கப் போகிறார். எவ்வளவு பெரிய பாக்கியம்!

இன்னும் மூன்று மணி அவகாசம் இருக்கிறது. ஸ்டேஷனுக்குச் சென்று அவரைக் கூட்டி வரவேண்டும். இரண்டரை மைல் வண்டிப் பிரயாணம் அவருக்குக் கஷ்டமாக இருக்குமோ? அங்கேயே ஒரு டாக்ஸி பிடித்து ஏற்றி அழைத்துவர வேண்டியதுதான்.

களைக்கொட்டையும், மண்வெட்டியையும் கையில் எடுத்துக்

கொண்டான். ரோஜாப் பதியன்கள் நட்டு முடித்தாகிவிட்டது. கீரைப் பாத்திகளுக்கு நாளை தண்ணீர் இறைத்துக் கொள்ளலாம். இப்போது, இந்த நிலையில் ராமநாதன் அவனைப் பார்த்தால் என்ன நினைப்பார்? நிச்சயமாக நிறைய சந்தோஷப்பட்டுக் கொள்வார். உழைப்பில் மிக்க ஆர்வமுள்ள மனிதர் அவர்.

மாம்பலத்தில் அவர் வீட்டில் அவன் தங்கி இருந்த அந்த ஒன்றரை மாத காலமும் எத்தனை விஷயங்கள் அவர் அவனோடு பகிர்ந்துகொண்டிருக்கிறார். தான் சின்னதாக ஒரு பாத்திரைக்கடை தொடங்கியதிலிருந்து ஆரம்பித்து இன்று ஒரு பெரிய மெட்டல் ஒர்க்ஸ் நிறுவனத்தின் உரிமையாளனாகி இருப்பதுவரை அனைத்துக்கும் காரணம் தன் அயராத உழைப்புதான் என்பதை அவர் பெருமையோடு கூறிக்கொள்வார். இளைஞர்கள் தங்கள் உடல் ஆரோக்கியத்தைப் பராமரிப்பதற்காக வீட்டு வேலை, தோட்ட வேலைகளில் ஈடுபட்டுப் பலன்பெற முடியும் என்பார்.

சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியில் ஓவிய ஆசிரியருக்கான ஒன்றரை மாதப் பயிற்சியைப் பெற வந்த அவன், அவர் வீட்டில் தங்கியபடிதான் சென்று வந்தான். அவன் வரையும் படங்களை அவர் மிகவும் சிலாகிப்பார். பாராட்டுவார்.

முதன் முதலாக அவர் வீட்டிற்குச் சென்று தன் தந்தை கொடுத்தனுப்பிய அறிமுகக் கடிதத்தை நீட்டியபோது –

"நீ செல்வரங்கத்தின் மகன் என்று எனக்குச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. சின்ன வயதில் அவன் எப்படி இருந்தானோ, அதே அச்சில் வார்த்ததுபோல்தான் இருக்கிறாய். உன்னைப் பார்க்கும்போது எங்கள் பள்ளி நாள்களின் இனிமை நினைவுகள் மனதில் எழுகின்றன. எனக்கு இவ்வளவு வசதி ஏற்பட்டும்கூட இன்றுவரை என்னிடம் அவன் ஒரு சிறு உதவியைக்கூட எதிர்பார்த்தவனில்லை. அப்படிப்பட்டவன் பிள்ளை என் வீட்டில் தங்கிப் படிக்க வேண்டியதை அவன் கடிதத்தில் கேட்டுக் கொண்டிருப்பதைப் போல் நான் செய்யப்போகும் உதவியாக என்னால் கருத முடியவில்லை. அதை என்னுடைய கடமையாகவே நினைக்கிறேன்!"

சத்யனுக்கு அவருடைய அன்பும் உபசாரமும் ஆச்சர்யத்தை அளித்தன. அதையும்விட அவனை வியக்க வைத்தது – ரவிவர்மாவின் ஓவியம் ஒன்று அங்கு உயிரோடு நடமாடிக் கொண்டிருந்ததுதான். அது அவர் மகள் சோபனா.

வயதுக்கு மீறிய வளர்ச்சி. குறுகுறுப்பான பார்வை. குழந்தை உள்ளம்.

"சத்யன் எங்கே பார்க்கலாம், என்னைப் போலவே உங்களால் ஒரு படம் எழுத முடியுமா?" என்பாள் சோபனா.

எழுதிக் காட்டுவான்.

"இவ்வளவு அழகாகவா இருக்கேன்!"

"இதைவிடவே அழகாக இருக்கே. ஆனால் என்னால் படத்தில் கொண்டுவர முடிஞ்சது இவ்வளவுதான்!"

கண்கள் சூரியகாந்தியாக மலர – அவள் அதை உடனே ராமநாதனிடம் தூக்கிக் கொண்டு ஓடுவாள்.

"சோபனா! நான் சொல்கிறேன் பார், சத்யன் ஒருநாள் மிகச் சிறந்த ஓவியனாகப் பிரகாசிக்கப் போகிறான். அவனை ஒரு சாதாரண ஓவியனாக என்னால் கற்பனை செய்ய முடியவில்லை. அவனது திறமை ஏதேனும் ஒரு பள்ளிக் காம்பவுண்டிற்குள் மட்டும் அடங்கிவிடக் கூடியது அல்ல" என்பார் அவர்.

சோபனா – சத்தியன் நட்பை அவர் பெரிதும்

இனியவை 40

"பிராமணர்க்கு வேதம் ஓதுதல் இனிது. இல்லறத்தாருக்கு பற்றுபாசம் இனிது. படையுடை யானுக்கு வீரம் இனிது. தந்தையே ஆனாலும் அவர் கூறும் தவறானவற்றைச் செய்யாமை இனிது."

ஆதரித்தார். அந்த நட்பின் கனத்தை அதன் முழுப் பரிமாணத்தை அவர்கள் பரஸ்பரம் உணர்வதற்குள்ளாகவே சத்யனின் பயிற்சி வகுப்புகள் முடிந்து, அவன் ஊர் திரும்ப நேரிட்டது.

என்றாலும் அடிக்கடி அவனுக்கு சோபனாவின் நினைவு வந்து கொண்டிருந்தது நிஜம். ஆனால் அப்போது அத்தகைய எண்ணங்களுக்கு அவன் அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லை. காரணம் அவனுக்கே அந்த அன்பிற்கான அடிப்படை எது என்று தீர்மானிக்க முடியாத குழப்ப நிலை. சோபனா அவனிடம் காட்டி வந்தது சிறுபிள்ளைத்தனமான சிநேகமாகக் கூட இருக்கலாமே!

இப்போது ஒரு சமயம் அவளுக்குக் கல்யாணம்கூட ஆகி இருக்குமோ? சத்யனுக்கு மனதிற்குள் சின்னதாக ஓர் ஏக்கம். கூடவே ஒரு சமாதானம்.

இரண்டு வருடங்களுக்கு முன் அப்பா இறந்துபோன சமயம் நிச்சயமாக ராமநாதன் வந்து விசாரித்துவிட்டுத்தான் போவார் என்று சத்யன் எதிர்பார்த்தான். ஆனால் ஏதோ காரணத்தால் தன்னால் வர இயலவில்லை என்று எழுதிவிட்டார். அதை மறக்காது எழுதினவர் திருமணம் நிச்சயமாகி இருந்தால் அழைப்பு அனுப்பாமலா இருந்திருப்பார்?

ரயில் வந்துவிட்டது. ராமநாதன் இளைத்திருந்தார். சற்றுச் சோர்வாகத் தெரிந்தார். ஐந்து வருடங்களுக்கு முன் அவரிடம் காணப்பட்ட உற்சாகமும் கலகலப்பும் வெகுவாகக் குறைந்து விட்டது.

"கடைசியில் டிராயிங் மாஸ்டராகத்தான் வேலை பார்க்கிறாயா?"

"ஆமாம்."

அவர் முகத்தில் சிறியதாய் ஏமாற்றம். இரவு அவர் அதிகம் பேசிக் கொண்டிருக்கவில்லை. எட்டரை மணிக்கு மேல் சிறிது பாலும் பழமும் சாப்பிட்டார். ஒன்பது அடித்ததும் படுத்துவிட்டார்.

மறுநாள் -

"இப்படித் தலைவாழைஇலை போட்டுத் தரையில் உட்கார்ந்து சாப்பிட்டு எவ்வளவு காலம் ஆகிவிட்டது. சும்மா சொல்லக் கூடாது. சமையல் ரொம்பப் பிரமாதம்" பக்கத்தில் சாப்பிட்டுக் கொண்டிருந்த சத்யனிடம் புகழ்ந்து கொண்டே ராமநாதன் உணவருந்தினார்.

ராமநாதனுடைய சிறந்த குணங்களில் அதுவும் ஒன்று. அவரிடம் எப்படித் தாழ்வு மனப்பான்மைக்கு இடம் இல்லையோ அதேபோல், தான் என்ற அகந்தையும் இல்லை.

அப்படிப்பட்டவரிடம் வந்ததிலிருந்து பேச்சில் ஒரு செயற்கையான சந்தோஷமும் மனதில் ஆழமான வருத்தமும் தெரிவதை இவனால் உணர முடிந்தது.

மாலை - "சூரியனார்கோவில் இங்கிருந்து எவ்வளவு தூரம்?" என்று கேட்டார்.



"பக்கம்தான், இரண்டு கிலோ மீட்டருக்கும் குறைவு. போய்விட்டு வர வண்டிக்கு ஏற்பாடு செய்கிறேன்."

"தேவை இல்லை. நடந்தே போக வேண்டும் போல் இருக்கிறது. ஒன்பது கிரகங்களுக்கும் அர்ச்சனை செய்யவேண்டும். தேவையான சாமான்களை மட்டும் வாங்கிக் கொண்டால் போதும். அங்கேயே கிடைக்கும் அல்லவா?"

சத்யனுக்கு அவரோடு நடக்கும்போது ஏதேதோ கேட்க வேண்டும்போல் தோன்றுகிறது. ஆனால் அவர் அடிக்கடி மேற்கொள்ளும் மௌனத்தின் கனம், அவனைப் பேசத் தயங்க வைக்கிறது.

சந்நிதியில் தேவையான பொருள்களை வாங்கிக்கொண்டு அவர்கள் கோயிலுக்குள் நுழைந்தார்கள்.

"இளவயதில் கும்பகோணத்தில்தான் இருந்தேன். இவ்வளவு பக்கத்தில் இருக்கும் இந்தக் கோயிலுக்கு அந்த நாளில் நான் ஒருமுறை கூட வந்ததில்லை. இப்போது இதைத் தேடி இருநூறு மைல் ஓடி வந்திருக்கிறேன். நேரம் அழைக்கிறது!"

ஏன் அழைக்கிறது? சத்யனுக்கு அவர் பேச்சு ஒன்றும் புரியவில்லை.

"அர்ச்சனை யார் பெயருக்கு?" - குருக்கள் கேட்டார்.

"சோபனா!"

"நட்சத்திரம்?"

"பரணி"

ஒன்பது சந்நிதிகளிலும் அதுவே தொடர்ந்தது.

மீண்டும் நடை.

இதன்பின் ராமநாதன் கொஞ்சம் தெம்பாகத் தெரிந்தார். மனதின் பாரங்களைச் சிறது இறக்கி வைத்தவர்போல் லேசாகக் காணப்பட்டார்.

காவேரிப் பாலத்திற்கு வந்தபோது கேட்டார். "சற்று இங்கே உட்கார்ந்துவிட்டுப் போகலாமா?"

சித்திரைக் காவேரி பிறந்த மேனியில் இருந்தாள். இருவரும் படிக்கட்டுகள் வழியே இறங்கி மணலில் நடந்தனர். சத்யனையும் தன் பக்கத்தில் உட்காரச் சொல்லிவிட்டு அமர்ந்தார். விரல்களால் மணலில் கட்டங்கள் போட்டார்.

அதற்கு மேலும் அந்த மௌனத்தின் இறுக்கத்தைத் தாள முடியாத சத்யன், "சோபனாவுக்கு என்ன ஆயிற்று?" என்று ஆவலுடன் கேட்டான்.

ராமநாதன் திடுக்கிட்டவர்போல் நிமிர்ந்தார். கண்கள் கலங்கிவிட்டன. ஒரே வார்த்தையில் சொன்னார், "இருக்கிறாள், ஓர் உடைந்துபோன பொம்மையாக."

சத்யன் அதிர்ச்சி அடைந்தான். ராமநாதன் சட்டென்று கேட்டார். "இந்தக் கோயிலுக்கு என்ன சிறப்பு?"

"இது ஓர் அனுகிரகத் தலம். வினைப் பயனால் அனுபவிக்கும் துயரங்களைக்கூட இவர்களை வேண்டிக் கொள்வதன்மூலம் துடைத்துக்கொள்ள முடியும்!"

ராமநாதன் கண்களில் மீண்டும் கண்ணீர்! "அதற்காகத்தான் வந்தேன்."

"அறிந்தோ அறியாமலோ அல்ல. அறிந்தே நான் செய்துவிட்ட ஒரு வினையின் பயனைத் துடைத்துக்கொள்ளத்தான் வந்தேன். வினைப் பயனாக இல்லாவிட்டால் என் மகள் ஏன் இப்படி ஆகவேண்டும்?"

சத்யன் பதறிப் போனான். "சோபனாவுக்கு அப்படி என்ன ஆயிற்று?"

ராமநாதன் சற்றுத் தயங்கிவிட்டுச் சொன்னார். "சத்யன், நான் பெரிய தவறு செய்துவிட்டேன். எனது இரண்டாவது திருமணத்தைத்தான் சொல்கிறேன்!"

சத்யன் வியப்போடு நிமிர்ந்தான்.

அவர் குரல் தழுதழுத்தது. "ஆமாம் சத்யன்! நான் இரண்டாம் கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். நண்பர்களின் வற்புறுத்தல் - சோபனாவுக்கும் திருமணம் ஆகிப் புருஷன் வீடு போய் விட்டால், எஞ்சிய என் வாழ்நாள்களை, அதுவும் கடைசிக் காலத்தை ஒரு பொறுப்பான துணை இன்றிக் கழிக்க வேண்டுமே என்கிற பயம் - இப்படிக் காரணங்கள். அந்த நேரத்தில் எனக்கு நியாயமாகப் பட்டன. ஒரு கோயிலில் வைத்துத் தாலி கட்டி அவளை என் மனைவியாக ஏற்றேன். பெற்றவர்களின் சம்மதத்திற்கும் வறுமைதான் காரணம் என்பதும் புரியும். ஆரம்பத்தில் சோபனாவுக்கு இந்த விஷயம் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. பிறகுதான் என்ன மணந்து அவளுக்குச் சிற்றன்னையாக வந்தவள் அவளோடு மேல்நிலைப் பள்ளி வரை படித்தவள் என்பது தெரிந்தது!"

சத்யன் இரண்டாவது முறையாகத் திடுக்கிட்டான். ராமநாதன் தலையைக் குனிந்தபடி பதில் சொன்னார். "உண்மைதான், அவளுக்கு என் மகள் வயதுதான். எங்கள் இருவருக்கும் இருபத்தைந்து வயது வித்தியாசம்."

சத்யனின் மனதில், இமாலயமாக உயர்ந்து

நின்ற ராமநாதன், கணத்தில் சரிந்து, ஒரு மிகச் சிறிய மண்மேடாகத் தோன்றத் தொடங்கி விட்டதைத் தவிர்க்க அவன் படாத பாடுபட்டான்.

"சோபனா என்ன சொன்னாள்?"

"என்னிடம் சண்டை பிடித்திருக்கலாம். நிறைய கோபித்திருக்கலாம். மரியாதைக் குறைவாகக் கூடப் பேசி இருக்கலாம். ஆனால் இவற்றில் எதையுமே அவள் செய்யவில்லை. மௌனத்தாலே என்னை அவள் நசுக்கிவிட்டாள். அவள் சித்தம் பேதலித்துவிட்டவள் போல் ஆகிவிட்டாள். சரியாக உண்பதில்லை. உறங்குவதில்லை. அவளுடைய நெருங்கிய பள்ளித் தோழியே என்றாலும் விமலியுடன் கூடப் பேச பயந்தாள். அவளை ஏக்கமும் பரிதாபமுமாய்ப் பார்த்தாள். பெரும்பாலும் வீட்டில் தங்குவதையே தவிர்த்து சிநேகிதிகள் வீடே கதியாகிக் கிடந்தாள். இந்த நிலையில்தான் ஒருநாள்... இவள் சென்ற ஸ்கூட்டர் மோட்டார் ஒன்றுடன் மோதி வலதுகால் எலும்பு முறிந்து இனி வாழ்வெல்லாம் சக்கர நாற்காலியில் தான் என்கிற நிலையில் இருக்கிறாள் சத்யன்!"

சத்யன் பேச்சற்றுப் போனான். ராமநாதனின் அழுகையை மௌனமாக கேட்டுக் கொண்டிருந் தான்.

மறுநாள் – அவர் ஊருக்குப் புறப்படும் வரை சத்யனுக்கும் அவருக்கும் பேச்சு வெகுவாகக் குறைந்து ஓர் இறுக்கமான சூழ்நிலைதான் உருவாகி இருந்தது.

ராமநாதனைப் போல் எல்லாம் அறிந்த ஒரு நல்ல மனிதர் எப்படி இவ்வளவு மோசமான ஒரு காரியத்தைச் செய்திருக்க முடியும்! ஆனால் இவர் செய்ததற்கு இவரல்லவா தண்டனை பெற வேண்டும்? பலி ஆகியிருப்பவள் எந்தப் பாவமும் செய்யாத சோபனாவாக இருக்கிறாளே!

ராமநாதன் ரயிலில் ஏறி அமர்ந்தபோது சத்யன் ஆதரவாகச் சொன்னான். "தயவுசெய்து மனம் தளராதீர்கள். சோபனாவுக்கு ஒரு வாழ்க்கை நிச்சயம் உண்டு. நீங்கள் நினைத்துக் கலங்குவதுபோல் அவளுடைய எதிர்காலம் சூன்யம் அல்ல!"

அவன் வார்த்தைகள் அவருக்கு எதையோ மறைமுகமாக உணர்த்த – கண்களில் நீர் திரை இட்டது. நம்பிக்கைச் சுடர்விட்டது.

அவர் ஊருக்குப் போய் ஒரு வாரம் கழித்து சத்யனுக்கு அவன் எதிர்பார்த்தது போலவே ஒரு கடிதம் வந்தது. எழுதி இருந்தவள் சோபனா!

அன்பு சத்யன், வணக்கம். அப்பா எல்லாம் சொன்னார். நீங்கள் கடைசியாக ரயிலடியில் ஏற்றிவைத்த நம்பிக்கைத் தீபம் உட்பட. அவர் இப்போது முடிக்க நினைப்பது தவறுக்குப் பிராயச்சித்தம்.

பண பலத்தினால்தான் என் வயதே உள்ள ஏழைப்பெண் ஒருத்தியின் வாழ்க்கையை இன்று வெறுமை ஆக்கிவிட்டிருக்கிறார். இது பிராயச்சித்தத்தால் தீராது.

ஒரு விதத்தில் என்னுடைய இன்றைய நிலையே ஆண்டவனாகப் பார்த்து அவருக்கு வழங்கி இருக்கும் தண்டனைதான். ஆண்டவனைப் பொறுத்த வரை அதோடு திருப்தியும் அடைந்திருக்கலாம். ஆனால் எனக்கு... இனி எதிர்காலம் முழுவதும் என் சிநேகிதியின் நலன் கருதி அவளுடனேயே வாழ்ந்து விடுவதுதான் முறையாகவும் அவர் செய்திருக்கும் தவறுக்குப் பிராயச்சித்தமாகவும் படுகிறது!

சத்யன் நீங்கள் ஓர் ஓவியர். வீணாகிப் போன ஓர் ஓவியத்தைத் திருத்த முயல்வதைவிட, புதிதாக ஒன்றைத் தீட்டிவிடுவதுதான் புத்திசாலித் தனமானதும் மனதிற்கு நிறைவானதுமான செயல். ஆகவே தாங்களும் அதுபோன்ற முயற்சியில் ஈடுபட்டு வெற்றி அடைவதையே நான் விரும்புகிறேன். மற்றபடி தங்களுக்கும் தங்களிடமுள்ள திறமைக்கும் என்றும் என் நெஞ்சில் நீங்காத ஓர் இடம் உண்டு! சோபனா.

**(1985 பிப்ரவரி – ஓம் சக்தியில் வெளியான சிறுகதை)**

இனியவை 40

"வீரனுக்கு வலிமையான குதிரை இனிது. மாலையணிந்த அரசர்களுக்கு போர்க்களத்தில் கரிய மலைபோன்ற யானைகள் சினம் கொண்டு போரிடுதலைப் பார்த்தல் இனிது. அன்புடையார் வாய்ச் சொற்கள் கேட்பது இனிது."

# “வாழ்க்கை இன்பமுள்ளதாகியது”

உ.வே.சாமிநாதையர்

**பிப்ரவரி – 19**
தமிழ்த் தாத்தா உ.வே.சா. பிறந்த தினம்

தமிழர்களின் தொன்மைச் சிறப்பை, கலாசாரத்தை, நாகரிகத்தை உலகம் அறியச் செய்பவை இலக்கியங்கள்தான். தமிழ் மண்ணில் தோன்றிய இலக்கியங்களுக்குக் கணக்கே இல்லை. ஆனால், அவை எல்லாம் ஏட்டுச் சுவடிகளாக இருந்தபடியால், காலப் போக்கில் மறைந்துவிடும். எனவே, உ.வே.சா அவர்கள் அரும்பாடுபட்டு பல ஊர்களுக்கும் அலைந்து திரிந்து ஓலைச்சுவடிகளைத் தேடிப் பெற்று அவற்றை நூல்வடிவில் பதிப்பிக்கும் பணியில் தம்மை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்டார். இன்றைக்கு நாம் படிக்கக் கிடைக்கும் சங்க இலக்கியங்கள் எல்லாமே அவருடைய அயராத உழைப்பின் பலன்தான் என்பதை உறுதிபடச் சொல்லலாம். அவருடைய பிறந்த தினம் இந்த மாதம் வருவதை முன்னிட்டு அவருடைய 'என் சரித்திரம்' என்ற நூலில் இருந்து ஒரு பகுதி...



திருவாவடுதுறையில் திருக்குளத்தின் வடகரையில் கீழ் மேலாக ஓர் அக்கிரகாரம் உண்டு. சுப்பிரமணிய தேசிகர் உத்தரவால் அதன் வட சிறகில் கீழைக்கோடியில் இரண்டு கட்டுள்ள வசதியான வீடு ஒன்று அமைக்கப் பெற்றது. மடத்திலிருந்து நல்ல சாமான்களை அனுப்பி அவ்வீட்டைத் தேசிகர் கட்டுவித்தார். அது கட்டி முடிந்தவுடன் தேசிகரே நேரில் வந்து அதனை ஒரு முறை பார்வையிட்டுச் சென்றார். ‘அவ்வீடு எதற்காகக் கட்டப்படுகிறது?’ என்பது ஒருவருக்கும் வெளிப்படையாகத் தெரியவில்லை. தம்பிரான்கள் மாத்திரம், “எங்கள் வேண்டுகோள் பலிக்கும் காலம் வந்துவிட்டது” என்று சந்தோஷ முற்றார்கள். நானும் ஒரு வகையாக ஊகித்து அறிந்தேன்.

**தாய் தந்தையர் வரவு**

ஒருநாள் தேசிகர் என்னை நோக்கி, “உங்கள் தகப்பனார் ஊருக்குப் போய்விட்டு வருவதாகச் சொன்னார்களே; ஏன் வரவில்லை?” என்று கேட்டார். “அவர்கள் அப்பக்கங்களிலுள்ள அன்பர்களின் ஆதரவு பெற்று இருந்து வருகிறார்கள்” என்றேன்.

“அவர்களுக்கு உடனே கடிதம் எழுதி இங்கேயே வந்து விடும்படி தெரிவியும். முதுமைப் பிராயத்தில் உம்மை விட்டு அவர்கள் இருப்பது சரியன்று” என்று தேசிகர் சொன்னார். அவர்

சொன்னது உண்மை தான். எனக்கும் அவர்களைப் பிரிந்திருப்பது வருத்தமாகவே இருந்தது. அந்த வருத்தத்தைப் போக்கிக் கொள்வதற்கு எனக்கு தைரியம் இல்லை. ஒன்று, நான் அவர்கள் உள்ள இடத்திற்குச் சென்று இருக்கவேண்டும்; அல்லது அவர்கள் நான் இருக்குமிடத்திற்கு வரவேண்டும். தேசிகர் கட்டளை எனக்கு உத்ஸாகத்தை உண்டாக்கியது. கடிதம் எழுதினேன். தாய் தந்தையர் ஒரு வாரத்தில் திருவாவடுதுறைக்கு வந்து சேர்ந்தனர்.

### இல்லறம்

தேசிகருடைய ஆலோசனை அப்பொழுது தான் எனக்கு நன்கு விளங்கிற்று. தாம் கட்டுவித்த புது வீட்டில் என் தாய் தந்தையருடன் என்னை வசிக்கச் செய்யவேண்டுமென்ற அவர் அன்பு கனிந்த கருத்தை நான் உணர்ந்து உள்ளம் பூரித்தேன். அது மட்டுமா? நான் கிரமமாக இல்லறம் நடத்த வேண்டுமென்பதும், நிரந்தரமாகத் திருவாவடுதுறைவாசியாக வேண்டுமென்பதும் அவர் விருப்பமென்பதையும் தெரிந்து என் நல்வினையை வாழ்த்தினேன்.

இடம் பொருள் ஏவலால் நிரம்பிய தேசிகருக்கு உள்ளமும் தயையால் நிரம்பியிருந்தது. பிறருக்கு உபகாரம் செய்து இன்பம் அடைவது அவர் இயல்பு. பிறருக்கு ஈவதனால் அவ்வீகையைப் பெறுபவனுக்கு உண்டாகும் இன்பத்தைக் காட்டிலும் கொடுப்பவருக்கு உண்டாகும் இன்பம் அதிகம். திருவள்ளுவர் மிக அழகாக,

"ஈத்துவக்கு மின்பம் அறியார்கொல் தம்முடைமை
வைத்திழக்கும் வன்கணவர்"

என்று கூறியதன் பொருளைச் சுப்பிரமணிய தேசிகருடைய செயலால் தெளிவாகத் தெரிந்து கொண்டேன்.

ஈசுவர வருஷம் கார்த்திகை மாதத்தில் (நவம்பர், 1877) நாங்கள் புது வீட்டிற்குப் போய் வசிக்கலானோம். எனக்கு உண்டான சந்தோஷத்தைக் காட்டிலும் என் தாய் தந்தையர் முதலியோருக்குப் பல மடங்கு அதிக மகிழ்ச்சி உண்டாயிற்று. மாதத்துக்கு ஓர் ஊரும் நாளுக்கு ஒரு வீடுமாக அலைந்து நைந்து வாழ்ந்த அவர்களுக்கு ஸ்திரமாக ஓரிடத்தில் வாழும்படி ஏற்பட்ட வாழ்க்கை இந்திர போகத்தைப் போல இருந்தது.

நான் இல்லற வாழ்வை மேற்கொண்டேன். எங்கள் குடும்பத்திற்கு வேண்டிய பொருள்களெல்லாம் மடத்திலிருந்து கிடைத்தன. முதலில் மடத்திலிருந்து அதிகாரிகள் சிலர், "அயலூராருக்கு இவ்வளவு சௌகரியம் ஏற்படுவதா?" என்று, பொறமை கொண்டனர். பெரிய இடங்களில் இப்படிச் சில பிராணிகள் இருப்பது இயற்கையே. அந்தப் பொறாமைக்காரர்கள் எங்களுக்குச் சில இடையூறுகளைச் செய்யலாயினர். புது வீட்டிலே குடிபுகுந்தவர்களுக்கு வேண்டிய நவ பாண்டங்களை நிறுத்தி விட்டனர்.

### பொன்னுசாமி செட்டியார்

இந்த விஷயத்தை எப்படியோ தெரிந்து கொண்ட சுப்பிரமணிய தேசிகர், மடத்தில் ராயஸ வேலை பார்த்துக் கொண்டிருந்தவரும் என்னிடம் பாடங்கேட்டு வந்தவருமாகிய மு. பொன்னுசாமி செட்டியாரென்பவரை அழைத்து, "சாமிநாதையருக்கு எந்தச் சமயத்தில் என்ன வேண்டுமோ அதை விசாரித்து நம்மிடம் தெரிவித்து அதைச் செய்து கொடுக்க வேண்டும். அவர் வீட்டுக்கு வேண்டிய சாமக்கிரியைகளின் விஷயத்தை எப்பொழுதும் நீரே விசாரித்துக்கொள்ள வேண்டும்" என்று கட்டளையிட்டார்.

பொன்னுசாமி செட்டியார் மிக்க விநயமும் என்பால் அன்பும் உடையவர். தமிழ் நூல்களை ஆழ்ந்து பயின்று இன்புறுவார். செய்யுள் இயற்றும் ஆற்றலும் அவருக்கு உண்டு. மடத்திற்குப் பல பெரிய மனிதர்கள் வந்து செல்வார்கள். அவர்களிடத்தில் எப்படிப் பழக வேண்டுமோ அவ்வாறு பழகுவதோடு தமக்கும் ஆதீனத்திற்கும் நல்ல பெயரை உண்டாக்குவார். அவரிடம் எஜமான விசுவாசமும், குருபக்தியும் சிறந்திருந்தன.





ஸந்நிதானத்தில் உத்தரவாயிற்று. அயலூரிலிருந்து வந்த விருந்தினர்களைப் போல நாள்தோறும் மடத்திலிருந்து சாமான்களைப் பெறுதல் உசிதமாக இராதென்றும், இனி நிரந்தரமாக இங்கே மடத்தைச் சார்ந்தவர்களாக இருக்க வேண்டுமென்றும் ஏற்பாடு செய்ய ஸந்நிதானம் திருவுள்ளம் கொண்டுவிட்டது. மேற்செலவுக்கு வைத்துக் கொள்ளும்படி இந்தத் தொகையையும் கொடுக்கும்படி உத்தரவாயிற்று" என்று சொல்லி என் கையில் ஐம்பது ரூபாயைச் சேர்ப்பித்தார்.

நான் மெய்ம்மறந்து போனேன். என் தந்தையார் தம்முடைய சிவபூஜைக்காக அப்பொழுது சந்தனம் அரைத்துக் கொண்டிருந்தார். நான் பணத்தை அவர் கையிலே கொடுத்து இன்னதுதான் சொல்வதென்று தெரியாமல் நின்றேன். அவர் அதை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

தம் வாழ்நாள் முழுவதும் ஆதீனத் தொண்டராகி வாழ்ந்தார். அவர்பால் எங்கள் குடும்பப் பாதுகாப்பை ஆதீனத் தலைவர் ஒப்புவிக்கவே அவர் மிகுதியான கவனத்தோடு தம் கடமையைச் செய்யலானார். ஒவ்வொரு நாளும் எங்களுக்கு வேண்டிய பொருள்களைப் பெரும்பாலும் குறிப்பால் அறிந்து அவற்றை அனுப்பி வந்தார்.

அவருடைய விசாரணையினால், இடையூறு செய்யப் புகுந்தவர்கள் முயற்சி ஒன்றும் பலிக்கவில்ல. தம்முடைய இயல்பு ஆதீனத் தலைவர் காதிற்கு எட்டினால் பெருத்த அபாயம் நேருமென்று அவர்கள் அஞ்சினர். வர வர அவர்களும் தம் பொறாமையினின்றும் நீங்கினர். தினந்தோறும் மடத்திலிருந்து தக்க காலத்தில் எங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களும் பிறவும் குறைவின்றிக் கிடைத்து வந்தன.

### நெல்லும் பணமும்

ஒரு நாள் எங்கள் வீட்டு வாயிலில் மூன்று வண்டிகள் வந்து நின்றன. சில ஆள்கள் இரண்டு குதிர்களைக் கொணர்ந்து வீட்டில் வைத்தனர். சிலர் வண்டியிலிருந்த அறுபது கல நெல்லை முப்பது முப்பது கலமாக அவ்விரண்டிலும் கொட்டி மண் பூசிவிட்டு, "ஸந்நிதானத்தில் இங்கே சேர்ப்பிக்கும்படி உத்தரவாயிற்று" என்று சொல்லிவிட்டுச் சென்றார்கள். அப்பால் பொன்னுசாமி செட்டியார் வந்தார். "தங்கள் வீட்டுச் செலவுக்கு அறுபது கலம் நெல் சேர்ப்பிக்கும்படி

"எல்லாம் பரமேசுவரன் திருவருள்" என்று சொல்லி நன்றியறிவு ததும்பும் பார்வையோடு பேச முடியாமல் நின்றார். அன்று பிற்பகலில் என் தந்தையார் மடத்திற்குச் சென்று சுப்பிரமணிய தேசிகரைக் கண்டு நெல்லும் பணமும் கிடைத்ததைத் தெரிவித்து அளவற்ற சந்தோஷமும் நன்றியறிவும் புலப்படச் சம்பாஷித்தனர். அப்போது தேசிகர், "இந்த மடத்தில் பெரிய காரியஸ்தர்களுக்கே மாசம் ஐந்து கலந்தான் சம்பளம். அதற்கு மேல் தங்கள் குடும்பத்திற்குக் கொடுக்க மனம் இருந்தும் வழக்கத்துக்கு விரோதமாக ஒரு காரியம் செய்தால் அநாவசியமான வம்புக்கு இடமாகுமோ என்று அப்படிச் செய்யவில்லை. இதைக் கொண்டு உசிதமான செலவு செய்து வந்தால் வேண்டியவற்றை அப்போதப்போது அனுப்புகிறோம்; கவலைப்பட வேண்டாம்" என்று சொன்னார்.

### தம்பிரான்களின் திருப்தி

நானும் என் தந்தையாரும் பிரிந்து வாழ்ந்து வந்த சங்கடம் தீர்ந்தது. ஸ்திரமான இடமும், நிலையான வருவாயும், பெரிய இடத்துச் சார்பும் கிடைத்தன. நான் திருவாவடுதுறை மனிதனாகி விட்டேன். என்னிடம் படித்து வந்த மாணாக்கர்களெல்லாம் மிக்க திருப்தியை அடைந்தார்கள். திருவாவடுதுறை மடத்தைச் சார்ந்தவனென்பதை உறுதிப்படுத்தியது போல என் புது வாழ்க்கை அமைந்தமையால், "இனி இவர் இங்கிருந்து போகமாட்டார்" என்ற நினைவே அவர்களுடைய திருப்திக்குக் காரணமாயிற்று.

இப்படி இறைவன் திருவருளால் எங்கள் குடும்பத்தில் எல்லோருடைய உள்ளத்திலும் ஒரு நிறைவு உண்டாகி எங்கள் வாழ்க்கையை இன்பமுள்ளதாக்கியது ●



# கோவையின் காவல் தெய்வம் கோனியம்மன்

கோவை ரயில் நிலையத்திற்கு அருகிலுள்ள டவுன்ஹால் பகுதியில், கோவையின் காவல்தெய்வமாக அருளாட்சி புரியும் அருள்மிகு கோனியம்மனின் திருக்கோயில் அமைந்துள்ளது. இந்தக் கோயிலின் பிரதான ராஜ கோபுரம் ஏழு நிலைகளுடனும், உச்சியில் ஒன்பது கலசங்களுடனும் விண்ணைத்தொடும் வகையில் நெடிதுயர்ந்து கம்பீரமாகக் காட்சியளிக்கிறது.

### கோனியம்மன் திருவுருவம்

கோனியம்மன் தனது எட்டு திருக்கரங்களில் சூலம், உடுக்கை, வாள், சங்கம், கபாலம், அக்னி, சக்கரம், மணி, இடது காதில் தோடு, வலது காதில்

சக்தி காமராஜ் | படங்கள்: கே.எம்.பிரசன்னா







குண்டலம் அணிந்து உக்கிரமான பார்வையுடன் பராசக்தியின் ஓர் உருவாக கோவையின் காவல் தெய்வமாக இருந்து பக்தர்களுக்கு அருள் புரிகின்றாள். அம்மனின் பார்வை பகைவர்க்குத் தான் உக்கிரமாகத் தோன்றுமே தவிர, ஆழ்ந்த அன்பு கலந்த பக்தியுடன் வழிபடும் பக்தர்களுக்கோ உள்ளத்தை ஆனந்திக்கச் செய்யும் கருணைப் பார்வை!

சிவமும் சக்தியும் வேறில்லை என்பதையே இந்த வடிவம் உணர்த்துகின்றது. அம்பிகையின் சந்நிதிக்கு எதிரே சிம்ம வாகனம் உள்ளது. முன் மண்டபத்தில் சரஸ்வதி தேவி, லட்சுமி தேவி, துர்கா தேவி ஆகிய தேவியர் இருக்கிறார்கள்.



இந்தத் திருத்தலத்தில் வேம்பு, வில்வம், நாகலிங்கம், அரசமரம் ஆகிய தேவ மரங்கள் உள்ளன.

## ஆதி கோனியம்மன்

மூலஸ்தானத்திலிருந்து வடக்குப் பார்த்து கோயில் கொண்டுள்ள ஆதி கோனியம்மன் சிலை மார்பளவு உருவம் 3 1/2 அடி அகலமும், 2 1/2 அடி உயரமும் கொண்டிருக்கிறது. இதன் அருகே மாசானியம்மன், சப்தகன்னியர் மற்றும் காவல் தெய்வங்கள் காட்சி தருகிறார்கள். அரச மரத்தின்கீழ் பஞ்சமுக கணபதி பத்து திருக்கரங்களுடன் காட்சி தருகின்றார்.

நவகிரக சந்நிதியில் இருக்கின்ற கிரகங்கள் தத்தம் நாயகியருடன் காட்சியளிப்பது மிகமிக விசேஷ மாகக் கருதப்படுகின்றது. சூரிய பகவான் ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தில் வீற்றிருக்கின்றார்.

சாந்த விநாயகர், மாகாளியம்மன், வள்ளி - தெய்வானையுடன் சுப்ரமணியர் சந்நிதிகளும் அமைந்திருக்கின்றன. அருணகிரிநாதர் 'கோவை மேவிய கோனியம்மன்' என்று பாடி இந்தக் கோயிலுக்குச் சிறப்பு சேர்த்திருக்கிறார்.

## திருத்தல வரலாறு

கொங்குநாடான கோவை மாநகர், ஆதியிலே அடர்மரங்கள் நிறைந்த காடாக இருந்திருக்கின்றது. இருளர்களின் தலைவர் கோவன் அதனைச் சீர்ப்படுத்தி நகரமாக மாற்றி ஆட்சிபுரிந்து வந்திருக்கிறான். கோவன் என்பவனால் நகரமாக மாற்றப்பட்டதால் அந்த நகரம் அவன் பெயரிலேயே 'கோவன்புதூர்' என்ற பெயரில் அழைக்கப்பட்டு, தற்போது கோயம்புத்தூர் என்று அழைக்கப் படுகிறது. ஒரு சமயம் அவன் ஆட்சி புரிந்த பகுதியில் பஞ்சம் ஏற்பட்டு மக்கள் வாழ வழியின்றி தவித்திருக்கிறார்கள். அவர்களுடைய நிலையைக் கண்ட கோவன், தன்னுடைய ஆட்சியின்கீழ் வசிக்கும் மக்கள், வாழ்வில் நன்மைகள் பல பெற்று பஞ்சம், பிணிகள் ஏற்படாமல் சிறந்து வாழ்ந்திட வேண்டி வடக்குப் பகுதியில் சிறு நிலத்தைச் சீரமைத்து அங்கு கல் ஒன்றினை வைத்து அம்மனை தங்களின் குலதெய்வமாக எண்ணி வழிபடத் தொடங்கி இருக்கிறான்.

கோவனின் ஆட்சிக்குப் பிறகு இந்தப் பகுதியை இளங்கோசர் என்பவர் ஆண்டு வந்திருக்கிறார். அப்போது சேர மன்னர் ஒருவர் படையெடுத்து வந்தபோது அவரிடமிருந்து நாட்டைக் காக்க கோவன்புத்தூரின் மையத்தில் ஒரு கோட்டையையும், மண் மேட்டையும் கட்டி காப்புத் தெய்வமான அம்மனை அங்கு வைத்து வழிபட்டிருக்கிறார் இளங்கோசர்.

கோசர் ஆட்சிக்குப் பிறகு, கொங்குநாட்டை கைப்பற்றிய மைசூர் அரசர், தமது ஆட்சிக் காலத்தில் கோனியம்மனுக்குப் பூஜைகள், தேர்த் திருவிழா தொடர்ந்து நடைபெற பூமிகளைத் தானமாகக் கொடுத்து உதவியிருக்கின்றார்.

## சிவபெருமான் - அம்பிகை திருமணம்

மாசித் திருவிழாவின்போது சிவபெருமான் அம்பிகையைத் திருமணம் செய்து கொள்வார். அப்போது கோயில் எதிரே யாகம் வளர்த்து அக்னியை சிவபெருமானாகப் பாவித்து பூஜை செய்வார்கள். இப்பூஜையில் பயன்படுத்தப்பட்ட தீர்த்தக் கலசத்தின் மேலே சாத்திய மாங்கல் யத்தை அம்பிகைக்கு அணிவிப்பார்கள். அக்னி வடிவ சிவபெருமான் அம்பிகையைத் திருமணம் செய்து கொள்வதாக ஐதிகம்.

## திருவிழாக்கள்

மாசியில் 14 நாள்கள் திருவிழா, தமிழ் வருடப் பிறப்பு, நவராத்திரி, கார்த்திகை, தனுர்மாதப் பூஜை, தைப்பொங்கல், தீபாவளி, அமாவாசை, பௌர்ணமி, ஆடிவெள்ளி மற்றும் ஆடிமாத ஊஞ்சல் உற்சவம் முதலிய விழாக்கள் வெகு விமர்சையாகக் கொண்டாடப்படுகின்றன.



மாசி மாதம் முதல் செவ்வாய்க்கிழமை பூச்சாட்டு நடைபெறுகின்றது. இரண்டாவது செவ்வாய்க்கிழமை அக்னிசாட்டு அன்று கொடியேற்றப்பட்டு விழா தொடங்குகின்றது. மூன்றாவது செவ்வாய்க்கிழமை திருக்கல்யாணம் உற்சவம் நடைபெறுகின்றது. தொடர்ந்து வரும் வெள்ளிக்கிழமை இந்திர விமானத் தெப்பம், மறுநாள் தீர்த்தவாரி ஆகிய விழாக்களும் நடைபெறுகின்றன.

### தேர்த் திருவிழா

கோவையில் நடைபெறும் ஒரே தேர்த் திருவிழா கோனியம்மன் தேர்த் திருவிழா மட்டுமே. நகரின் பல்வேறு பகுதிகளிலிருந்து மட்டுமல்லாது, சுற்றுவட்டார கிராமங்களிலிருந்தும் பக்தர்கள் கூட்டம் அலைகடலெனத் திரண்டுவந்து தேர்த் திருவிழாவைக் கண்டு அம்மனின் அருள் பெற்றுச் செல்கிறார்கள்.

இனியவை 40

“கொல்லாமை
முன் இனிது.
அரசன் நடுவு
நிலைமை தவறி
சிறப்பு செய்யாமை
இனிது.
செங்கோலனாக
இருப்பது இனிது.
யாவரிடத்தும்
திறமையால்
கூடியமட்டும்
குற்றம் கூறாமை
மிக இனிது.”

### கோனியம்மனின் மகிமை

கோனியம்மனை வேண்டி தங்கள் வீட்டுப் பிள்ளைக்கு வரன் கிடைக்கப் பெற்றவர்கள், கோயிலிலேயே நிச்சயதார்த்த நிகழ்ச்சியை நடத்துகிறார்கள். மணமக்களின் இரு வீட்டாரும் ஒரு கூடையில் உப்பை நிரப்பி அதன்மேல் மஞ்சள், தேங்காய், பூ, வெற்றிலைப் பாக்கு ஆகியவற்றை வைக்கிறார்கள். கோனியம்மனின் சாட்சியாகத் திருமணத்தை உறுதி செய்கிறார்கள்.

அம்மனை மனதார வேண்டிக்கொண்டால் திருமணத் தடை நீங்கும். குழந்தைப் பேறு கிடைக்கும். தொழில் விருத்தியடையும் என்பது பக்தர்களின் பெரும் நம்பிக்கையாக இருக்கிறது.

### தங்கப்பாவாடை சாத்துதல்

மாணவ, மாணவிகளுக்குப் பள்ளி – கல்லூரித் தேர்வுகளில் சிறப்பான வெற்றி கிடைக்கவும், நல்ல வேலைவாய்ப்புகள் அமையவும் கோனியம்மனுக்குத் தங்கப்பாவாடை சாத்தி வேண்டிக்கொண்டால் வேண்டுதல் நிறைவேறும் என்பது பக்தர்களின் ஆழ்ந்த நம்பிக்கை. கோவை மாநகரைக் காக்கும் காவல் தெய்வமாக – தனிப்பெரும் அரசியாக விளங்கும் கோனியம்மன் தன்னை வழிபடும் பக்தர்களுக்குத் தன்னுடைய திருவருளை வாரி வழங்கி அருள்புரிகின்றாள். கோவையில் அருளாட்சி செய்யும் கோனியம்மனை வாழ்வில் ஒருமுறையேனும் தரிசித்து அருள் பெறுவோம்!

### நடை திறந்திருக்கும் நேரம்

காலை 6 மணி முதல் மதியம் 12.30 மணிவரை. மாலை 4 மணிமுதல் இரவு 9 மணிவரை.

### பேருந்து வசதி

கோனியம்மன் கோயிலுக்கு கோவை ரயில் நிலையம், காந்திபுரம் ஆகிய இடங்களிலிருந்து ஒவ்வொரு ஐந்து நிமிட இடைவெளியில் பேருந்து வசதி உள்ளது..



மணிகர்ணிகாவின் வீரமும் விவேகமும் ஜான்சியின் அரண்மனையை எட்டும் அளவுக்கு அவளுடைய வீர சாகசங்களும், எதற்கும் அஞ்சாத துணிச்சலும் காரணமாக இருந்தன. நான்கு வயதில் தன் தாயை இழந்துவிட்ட மணிகர்ணிகாவை வளர்ப்பதிலேயே அவளுடைய தந்தை தன்னை ஈடுபடுத்திக் கொண்டார்.

சிறு வயதில் தன்னுடைய வயதையொத்த பெண்பிள்ளைகளுடன் விளையாடிப் பொழுதைக் கழிப்பதை அவள் எப்போதும் விரும்பியதில்லை. ஆண்களைப் போலவே தன்னை பாவித்துக் கொண்டாள். ஆண்களுக்கான விளையாட்டுகளிலேயே ஆர்வம் காட்டினாள். அவளுடைய விளையாட்டுத் தோழர்கள் யார் என்று சொன்னால் ஆச்சர்யமாக இருக்கும். ஆம். அவளை விடவும் பல வயது மூத்தவர்களான

நானா சாஹேபும், தாத்யா தோபேவும்தான் அவளுடைய விளையாட்டுத் தோழர்களாக இருந்தனர். அவர்களுக்கு சரிநிகர் சமானமாக மணிகர்ணிகாவும் யானையேற்றம், குதிரையேற்றம், வாள்சண்டை, வில்வித்தை என்று அனைத்தும் கற்று வீரப் பெண்ணாக விளங்கியதுடன் கல்வியிலும் சிறப்புற்றுத் திகழ்ந்தாள்.

ஒருநாள் நானா சாஹேப் யானை சவாரி செய்து வருவதைக் கண்ட மணிகர்ணிகா, விரோதம் பாராட்டிக் கொள்ளவில்லை என்பதும் குறிப்பிடத் தக்கது.

ஒருநாள் பதினெட்டு வயதான நானா சாஹேப் மணிகர்ணிகாவைத் தன் குதிரையில் ஏற்றிக்கொள்வதற்காகக் காத்திருந்தபோது, குதிரை திமிறிக்கொண்டு ஓடத் தொடங்கியது. நானாவால் குதிரையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஆனால், மணிகர்ணிகா மிகுந்த துணிச்சலுடன் செயல்பட்டு குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து இழுத்துத் தடுத்து



தானும் யானை சவாரி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டாள். அவளை கேலி செய்ய நினைத்து அவளுடைய விருப்பத்தை நிராகரித்தான். நானாவின் நிராகரிப்பு அவளுடைய மனதில் ஒரு வைராக்கியத்தைத் தோற்றுவித்தது. அந்த வைராக்கியத்துடனே நானா சாஹேபின் ஒவ்வொரு யானைக்கும் பத்து யானைகளை தனக்கு உரிமையாக்கிக் கொள்வேன் என்று சபதம் செய்தாள். அதுமட்டுமல்ல, தான் ஒரு பெண் என்பதால்தான் நானா சாஹேப் தன்னை ஏளனம் செய்ததாக நினைத்த மணிகர்ணிகா, தன்னை ஒரு வலிமையான பெண்ணாக அடையாளப்படுத்திக் கொண்ட துடன், எவர் முன்னும் தலைகுனிந்து நிற்கக் கூடாது என்ற உள்ள உறுதியும் கொண்டாள். அதே நேரம் அவளும் சரி, நானாவும் சரி ஒருவரையொருவர் நிறுத்தி, நானா சாஹேபை பெரும் ஆபத்தி லிருந்து காப்பாற்றினாள்.

இப்படியாக வீரத்திலும் விவேகத்திலும் சிறந்து விளங்கிய மணிகர்ணிகாவைப் பற்றிய தகவல் ஜான்சி அரண்மனையை எட்டியது. அவளையே ஜான்சியின் அரசியாக முடிசூட்ட முடிவு செய்த ஜான்சி அரச குடும்பத்தினர், மணிகர்ணிகாவை ஜான்சியின் மன்னராக இருந்த கங்காதர் ராவுக்குத் திருமணம் செய்து வைத்தனர். அப்போது மணிகர்ணிகாவுக்கு வயது பதினான்குதான். ஜான்சியின் மன்னரை மணந்துகொண்ட பிறகு, அரசகுல வழக்கத்தின்படி அவளுக்கு லட்சுமிபாய் என்ற பெயர் சூட்டப்பட்டது. இனி மணிகர்ணிகாவை லட்சுமிபாய் என்றே அழைப்போம். கங்காதர் ராவின் முதல் மனைவி இறந்துவிட்டபடியாலும், குழந்தை இல்லை என்பதாலும் கங்காதர் ராவ்

லட்சுமி பாயை இரண்டாவதாகத் திருமணம் செய்துகொண்டார்.

லட்சுமிபாய் ஜான்சி மன்னரைத் திருமணம் செய்துகொண்டதும் அவளுடைய தந்தையும் ஜான்சி அரண்மனையில் வேலைக்குச் சேர்ந்துவிட்டார். எனவே, லட்சுமிபாய் தன் தந்தையிடம் கற்ற கல்வி தடைப்படாமல் தொடரவே செய்தது.

பேஷ்வாக்களின் ஆட்சிப் பொறுப்பில் இருந்த மராத்தியப் பகுதிதான் லட்சுமிபாய் கங்காதர் ராவைத் திருமணம் செய்துகொண்டு ராணியாக முடிசூட்டிக்கொண்ட ஜான்சி. ஜான்சி, ராமசந்திர ராவ் என்பவரின் ஆட்சிக் காலத்தில் இருந்தபோது ஆங்கிலேயர்களின் தலைமையின் கீழ் கட்டுப்பட்டு நடக்க ஒப்புக்கொண்டு கப்பம் செலுத்தி வந்தார். அவருக்குக் குழந்தை பாக்கியம் இல்லாத காரணத்தால் அவருக்கு சிறிய தந்தை உறவுமுறையான ரகுநாத ராவ் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். அவருக்கும் குழந்தை பாக்கியம் இல்லாமல் போய்விட்டது. எனவே, அவருடைய சகோதரர் கங்காதர் ராவ் ஆட்சிப் பொறுப்புக்கு வந்தார்.



அதிசயிக்கத் தக்க வகையில் கங்காதர் ராவுக்கும் லட்சுமி பாய்க்கும் அழகிய ஆண்குழந்தை பிறந்தது. ஆனால், நான்கு மாதத்திலேயே குழந்தை இறந்துவிட்டது. மகன் இறந்த கவலையிலேயே இருந்த கங்காதர் ராவ், தான் இறப்பதற்குச் சில நாள்கள் முன்பு தன் குடும்பத்தின் வேறொரு கிளையிலிருந்து சிறுவன் ஒருவனைத் தத்து எடுத்திருந்தார்.

அவனையே தன் வாரிசாகவும் அறிவித்து விட்டார். தனக்குப் பின்னர் தன் வளர்ப்பு மகன் வளர்ந்து பதவி ஏற்கும் வரை அவன் சார்பில் தன் மனைவி லட்சுமி பாயை அரசு நடத்த அனுமதிக்குமாறு வெள்ளையருக்கு ஒரு வேண்டுகோளும் விடுத்து விட்டு, தன் இறுதி மூச்சை விட்டார்.

ஆனால், டல்ஹௌசி அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. வருடத்திற்கு 60,000 ரூபாய் மானியத் தொகையும், ஒரு மாளிகையும் மட்டுமே லட்சுமி பாய்க்குத் தருவதற்கு ஒப்புக் கொண்டார். சொந்த மண்ணை ஆட்சி செய்து வந்த லட்சுமி பாய்க்கு, எங்கிருந்தோ வந்த ஆங்கிலேயர்கள் மானியத் தொகை தருவதாகக் கூறினார்கள். லட்சுமி பாயால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. லண்டன் கவுன்சிலில் முறையீடு செய்தாள். ஆனால், அந்த முறையீடும் தோற்றுப் போய் விட்டது. எனவே, அவள் தந்தையுடனும், வளர்ப்பு மகனுடனும் அரண்மனையிலிருந்து வெளியேறி தனக்கென ஒதுக்கப்பட்ட மாளிகைக்குச் சென்று விட்டாள்.

உரிய காலத்துக்காகக் காத்துக்கொண்டிருந்தாள். அந்தக் காலமும் 1857-ம் ஆண்டு வரவே செய்தது. எப்படி..?

- தொடரும்

இனியவை 40

“கூடிய மட்டும் தருமம் செய்தல் இனிது. சான்றோர்களின் பயனுடைய சொல் இனிது. கல்விச் செல்வம், அதிகாரம், ஆண்மை முதலிய எல்லாம் இருந்தும் 'நான்' என்ற குணம் இல்லாதவனைத் துணையாகக் கொள்வது இனிது.”

எஸ்.கண்ணன்கோபாலன் | படங்கள்: ரெங்கநாயகி

# தான் சூடி மலர் தந்த தாத்பர்யம்!



சென்ற இதழ் தொடர்ச்சி

கோயிலுக்குப் புறப்பட ஆயத்தம் செய்த பெரியாழ்வாரின் குரல் கேட்டு. ஒரு வினாடி கோதையின் பிரமை கலைகிறது... 'தான் விஷ்ணுசித்தரின் மகள்... பெருமாளுக்குச் சூட்டப்படவேண்டிய மாலை தன் கழுத்தில் இருக்கிறது' என்ற உலகியல் உணர்வு சட்டென்று எழ, மாலையைக் கழற்றி கூடையில் வைத்துவிடுகிறாள்...

மாலை ஏற்கெனவே கோதையால் சூட்டப்பட்டதை அறியாமல் விஷ்ணுசித்தர் மாலையை எடுத்துக்கொண்டு சென்று பெருமாளுக்குச் சாத்துகிறார். அந்த மாலையை சூடியதும் மாயவனான எம்பெருமாளின் தோற்றத்திலேயே ஒரு புதுப் பொலிவு... புன்னகையில் ஒரு புதிய ஒளி! அதைக் கண்ட பெரியாழ்வாருக்குப் பெரும் திகைப்பு. 'பெருமாளின் திருமேனியில் இன்று மட்டும் ஏன் ஒரு புத்தொளி... ஒரு வேளை, நம் கைங்கர்ய பலன் கனிந்து வருகிறதோ?' என்று எண்ணி மகிழ்கிறார்...

அன்று முதல் அந்த தேவ நாடகம் தொடருகிறது. கோதை சூடிக் கொடுத்த மாலைகளை வைகுந்தவாசன் ஏற்று அணிந்து மோகனப் புன்னகையுடன் காட்சி தருகிறான்.

ஒருநாள்....

கோதை யார் என்பதை பெரியாழ்வாருக்கு உணர்த்தத் திருவுள்ளம் கொள்கிறான் பெருமான். பெருமாளுக்குத் தொடுத்து வைத்த மாலையை அவள் தான் சூடிக் கொடுக்கும் காட்சியை அவர் கண்களுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டான்.

இறைவனுக்காகத் தான் தொடுத்த மாலையைச் சூடியக் கோலத்தில் நின்ற சுடர்க்கொடியைக் கண்டதும், 'அபசாரம், அபசாரம்!' என்று அரற்றினார் ஆழ்வார். மகள் அணிந்துவிட்டதால் அபசாரமாகிவிட்ட மாலையை பெருமானுக்கு சாத்தும் துணிவு வரவில்லை அவருக்கு. அதனால் அன்று மாலை சாத்தும் கைங்கர்யம் தடைப்பட்டுப் போயிற்று.

தன் இல்லத்திலேயே துவண்டு கிடக்கிறார் பெரியாழ்வார்.

மாயையில் சிக்கி விடுபடாத மனம், 'மாயவனுக்கு அபசாரம் நிகழ்ந்து விட்டதே' என்று புலம்பிக் கொண்டிருக்கிறது. அன்று, 'ஆதிமூலமே' என்ற யானையின் குரல் கேட்டு அருள்புரிய வந்த நாராயணன், திரௌபதியின் குரல் கேட்டு துயர் களைய வந்த திருத்துழாய் மாலை மார்பன் – ஆழ்வாரின் அஞ்ஞானப் புலம்பல் கேட்டு புறப்பட்டு வருகிறான்...



காலங்கள் தோறும் உண்மைகளை உணர்த்த கண்ணன் நடத்திக் காட்டும் நாடகங்கள்தான் எத்தனை எத்தனை!

'மனிதனே! பூமியில் நிகழும் எந்தக் காரண காரியங்களுக்கும் நீ பொறுப்பானவன் அல்ல... வெறும் கடமையை மட்டும் செய்வதற்காகவே பூமியில் ஜன்மம் எடுத்தவன்; பலன்களுக்கு நானே கர்த்தா' என்ற தத்துவத்தை விஜயன் மூலம் உலகுக்குச் சொல்ல, குருக்ஷேத்திர மண்ணில் பதினெட்டு நாள் பாரதப் போரையே நடத்தினான் கிருஷ்ணன். பரமாத்மாவான ஆண்டவனை அடைய ஜீவாத்மாக்கள் என்ன செய்யவேண்டும் என்பதை விளக்க, சர்வலோக பிராட்டியான லட்சுமிதேவியை ஆண்டாளாக அவதாரம் எடுக்கச் செய்து ஸ்ரீவில்லிபுத்தூர் மண்ணில் எம்பெருமாள் ஆடிய நாடகமே அது!

ஆம்; தான் சீராட்டிப் பாராட்டி வளர்க்கும் செல்வ மகள் கோதை, ஸ்ரீலட்சுமியின் அவதாரம்தான் என்று பெரியாழ்வாருக்கு உணர்த்த அவன் ஆடிய நாடகம்தான்–,

அந்த மாலைசூட்டல் விளையாட்டு!

கோதை சூடிக் கொடுத்த மாலையைத் தான் பெருமாளுக்கு சூட்டியதால் அபசாரம் நேர்ந்து விட்டது என்று புலம்பித் தவித்த பெரியாழ்வாரின் கனவிலே காட்சி தந்து, "ஆழ்வாரே, உமது புதல்வியின் பெருமையை நீர் அறியவில்லை. அவள் எம்முடையவள். அவள் சூடிக் கொடுத்த மாலைதான் எமக்கு உகந்தவை. இனி தினமும் அவள் சூடித் தரும் மாலைகளையே நீர் எமக்குச் சாத்த வேண்டும்!" என்று கூறி அருளினார் எம்பெருமான்.

பெருமாளின் அருள்வாக்கைக் கேட்டு ஆழ்வார் பேரானந்தமடைந்தார். 'தான் சூடிக் கொடுத்த மாலையை எம்பெருமானுக்கே அளிக்கும் அளவு என் மகள் பெருமை பெற்றவளா?' என்று பூரித்தார் அவர். ஆனால், பரமநாயகனான ஸ்ரீமந்நாராயணனே அந்தச் சம்பவத்தின் மூலம் உலகுக்கு மறைப் பொருளாக ஓர் அரிய தத்துவத்தை உணர்த்தியவாறு ஒளிமயமாகப் புன்னகைத்து நின்றான்.

ஆண்டாள் சூடிக் கொடுத்த 'அபசாரத்தை' எம்பெருமான் உண்மையில் அபசாரம் என்று கருதி யிருந்தால், அந்த அபசாரத்தை மன்னித்து அதை அன்றோடு நிறுத்தச் செய்திருப்பான். ஆனால் பெருமானோ, தினமும் ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலையையே தமக்குச் சாத்த வேண்டும் என்றல்லவா திருவுளம் கொண்டு கட்டளையிட்டான்...

எம்பிரானின் அந்தக் கட்டளைக்குக் காரணம் என்ன?

அந்த தேவ விளையாட்டின் உண்மை நமக்கு எளிதில் புலப்படவில்லை... ஒருவேளை, பெருமாளின் சந்நிதியில் அந்த விளக்கம் கிடைக்குமோ? அவரைத் தரிசிக்கச் செல்கிறோம்.

இனியவை 40

"பொருள் உடையவனது ஈகை இனிது. மனைவியுள்ளமும் கணவன் உள்ளமும் ஒன்றுபடக் கூடுமாயின் மனை வாழ்க்கை இனிது. உலக வாழ்க்கை நிலையில்லாதது என்று ஆராய்ந்துணர்ந்து முற்றும் துறத்தல் இவை அனைத்திலும் மிக இனிது."







ஆண்டாள் சந்நிதியிலிருந்து முந்திய நாள் இரவு பிராட்டி சூடிக் களைந்த மாலை ஸ்தானிகர்களால், மேள தாளங்களுடன் வடபுறமிருக்கும் வடபத்ரசாயி பெருமாள் சந்நிதிக்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

இன்றிருக்கும் ஆண்டாள் நாச்சியாரின் சந்நிதி அன்று பெரியாழ்வார் வாழ்ந்த மாளிகையாக இருந்தது. தான் மனிதப் பிறவி எடுத்த, வளர்ந்த இடத்திலேயே மணாளரான ரங்கமன்னாருடன் கோயில் கொண்டிருக்கிறாள், பிராட்டியாரான ஆண்டாள். அதை அடுத்து அமைந்திருப்பது, பிராட்டி அவதரித்த பெரியாழ்வாரின் நந்தவனம்.

ஆண்டாள் நீராடி மார்கழி மாதம் பாவை நோன்பு நிறைவேற்றிய திருமுக்குளம், அவள் மாலை சூடி அழகு பார்த்த கண்ணாடித் தீர்த்தம், மற்றும் விஷ்ணு தீர்த்தம், திருப்பாற்கடல், சக்ர தீர்த்தம், நூபுர கங்கை, சோனேரி தீர்த்தம், ரெங்க தீர்த்தம், பஞ்ச தீர்த்தம் - ஆகிய ஒன்பது தீர்த்தங்கள்.

இந்தத் தலத்தில் உள்ள தீர்த்தங்களுக்குள் சிறப்பு மிக்கது திருமுக்குளம். அதற்கும் காரணம் உண்டு. அது எம்பெருமானின் ஸ்ரீசக்கரத்தின் சுத்திகரிப்புப் பணிக்காக உருவான பெருமைக்கு உரியது. முன்பு, செம்பகாரண்யம் என்ற வனத்தில் தவமியற்றி வந்த மகரிஷிகளுக்கு 'காலநேமி' என்ற அசுரன் தொல்லை அளித்து துன்புறுத்தி வந்தான். மகரிஷிகள் ஸ்ரீமந்நாராயணனிடம் சரண் புகுந்தனர். சுவாமி, சக்கரத்தாழ்வாரை காலநேமி பேரில் ஏவினார். சக்கரத்தாழ்வார் காலநேமியை சம்ஹரித்துவிட்டு ரத்தம் தோய்ந்தவராய் பெருமாளின் சந்நிதியில் வந்து நின்றார்.

உடனே அவரைச் சுத்திகரிப்பதற்காக, கங்கை - யமுனை - சரஸ்வதி ஆகிய மூன்று நதிகளும் ஓரிடத்தில் சுரக்க, அந்த மூன்று நதிகளின் சங்கமத்தில் நீராடி, பெருமாளின் திருக்கரத்தில் அமர்ந்தார் சக்கரத்தாழ்வார்.

அந்த மூன்று நதிகளின் சங்கம தீர்த்தமே, ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள திருமுக்குள தீர்த்தம். குளத்துக்குள் குளம் என்ற அமைப்பில் மூன்று குளங்கள் கொண்டிருப்பதால் அந்தக் குளம் திருமுக்குளம் என்று அழைக்கப்படுகிறது.

அந்தத் தீர்த்தத்தின் பெருமைக்குப் பெருமை சேர்ப்பவை, அந்தத் தீர்த்தத்தில் நிகழும் ஆண்டாள் பாவை நோன்பு உற்சவம்... அந்த திருமுக்குளப் படிக்கரையில்தான் ஆண்டாள் நீராடி தம் தோழியருடன் பாவை நோன்பு நோற்கிறாள்.

ஆண்டாளை அக்குளக்கரைக்கு எழுந்தருளச் செய்து, அவள் திருமேனியை எண்ணெய் - சீயக்காய் இட்டு நீராட்டி, நோன்பு வைபவம் காணச் செய்யும் சின்னச் சின்ன சாஸ்திரோக்தமான சடங்குகளும், கோலாகலங்களும்... அப்பப்பா... அவற்றை வார்த்தைகளால் வர்ணிக்க இயலாது. கண்டு உணர்ந்து ஆனந்தித்து அனுபவிக்க வேண்டிய அற்புதத் திருக்காட்சிகள் அவை.

இப்படிப் பல புனிதப் பெருமைகளும், லௌகீக மாந்தருக்குப் பிரமிப்பூட்டும் சில 'பெரிய' பெருமைகளும் பெற்ற திருத்தலம் அது. ஆம்! தமிழ்நாட்டிலேயே பெரிய தேர்களில் ஒன்று ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் திருத்தேர். (இன்னொன்று, திருவாரூர் தியாகராஜர் தேர்.)

அதேபோல் கோபுரமும்! 'மகாமேரு மலை போன்றது' என்று கவியரசர் கம்பர் உவமானம் கூறிப் புகழ்ந்திருக்கும் பிரம்மாண்ட கோபுரம்.

இத்தனை பெருமைகளுக்கும் தலையாய தலைப்பெருமை ஒன்று உண்டு. அதாவது, ஆண்டாளின் இத்திருக்கோயிலை நிர்மாணித்த ஆதி தர்மகர்த்தா பெரியாழ்வார். கோயில் கொண்டிருப்பவர்கள், உலகாசார வழக்கப்படி - தர்மகர்த்தாவின் மகளும் - மருமகனும்!

மனித குலத்தோடு இப்படி ரம்யமான உறவுகளைத் தோற்றுவித்து மாய நாடகம் ஆடும் மகாவிஷ்ணுவின் தரிசனம் காண நடக்கிறோம்... பாதையெங்கும் பக்தி மணம்... ஆண்டாள் அவதாரத்தால் பெருமை பெற்ற - பெரியாழ்வார் உருவாக்கிய அந்த நந்தவனத்தை தரிசிக்கும்போது, பெரியாழ்வாரின் பிரபந்தங்களும், ஆண்டாளின் பாசுரங்களும் நம் மனத் திரையில் வரிகளாக ஓடி நம்மை மெய்சிலிர்க்க வைக்கின்றன... பக்தியும் காதலும் பாமாலையாக மணம் வீசுகின்றன. ஆண்டாளின் கனவுகளையும், கற்பனைகளையும் 'கண்டும், கேட்டும்' அனுபவித்த கல்லும், மண்ணும் இன்னும் அங்கேதான் இருக்கின்றன.

அந்த இடத்துக்குத் தரிசனத்துக்கு வரும் வடநாட்டு பக்தர்கள் அந்த நந்தவனத்திலிருந்து மண்ணை சேகரித்து புனிதமாகப் போற்றி எடுத்துச் செல்வதைக் காண்கிறோம். அது மட்டுமல்ல, வடக்கே ராதைக்கு நிகராகத் தெற்கே கோதை என்று நம் ஆண்டாள் பிராட்டியாரைப் போற்றித் தொழுவதையும் காண்கிறோம்.

ஆண்டாள் அவதரித்த அந்த நந்தவனத்தில் நடந்த மகத்தான சம்பவங்களை இன்றும் மாதாந்திர, வருடாந்திர திருவிழாக்களாக ஸ்ரீவில்லிபுத்தூர் திவ்யதேசம் நினைவுகூர்ந்து கொண்டிருக்கிறது. ஆடி மாதம் பூர நட்சத்திரத்தில் ஆண்டாள் அவதரித்ததை நினைவுப்படுத்த 10 நாள்கள் திருவாடிப் பூர உற்சவம். அந்த உற்சவத்தில் நடக்கும் பெரியாழ்வார் மங்களாசாசன விழா...

மார்கழி மாதத்தில் ஆண்டாள் பாவை நோன்பு ஏற்று நிறைவேற்றிய எண்ணெய்க்காப்பு உற்சவம்... தான் விரும்பிய நாராயணனை திருமணம் செய்ய ஆண்டாள் கைக்கொண்ட பாவைநோன்பு விழா... திருப்பாவை பாடி, தோழியருடன் திருமுக்குளத்தில் நீராடி நோன்பு நிறைவேற்றிய அந்தக் காட்சி நம் நினைவில் நிறைகின்றன.

'ஸ்ரீசங்குசக்கர நாயகனான ஸ்ரீமந்நாராயணனை அல்லாமல் மானிடர் எவரையும் மணக்கும் பேச்சுக்கே இடமில்லை!' என்று அறிவித்து - அவனை அடைந்தே தீருவேன் என்று பக்திப் பெரும் நோன்பு ஏற்கிறாள்






ஆண்டாள்.

மகளின் வைராக்கியத்தைக் கண்ட விஷ்ணுசித்தர் திகைத்து - பின் மனம் தெளிந்து, "கோதையே! எத்தலத்தில் உறையும் பெருமாளை நீ கைப்பிடிக்க விரும்புகிறாய்?" என்று வினவுகிறார். 'குடதிசை முடியை வைத்து குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டி தென்திசை இலங்கை நோக்கி எம்பெருமான் பள்ளி கொண்டிருப்பது, தெற்கே உள்ள இலங்கையை நோக்கித்தான்' என்று பாடியது சரியல்ல என்று அப்போதுதான் தெரிகிறது. ஆம், தெற்கிலிருக்கும் ஸ்ரீவில்லிபுத்தூரைப் பார்த்து - அங்கு பிறக்கவிருந்த ஆண்டாளை ஆட்கொள்ள உரிய காலம் நோக்கித்தான் அரங்கன் அப்படி தென்திசை நோக்கிப் பள்ளி கொண்டிருந்திருக்கிறான் என்று உணர்த்துகிறாள் கோதை.

தன் திருமகளின் குறிப்புணர்ந்து பெரியாழ்வார் திருவரங்கப் பெருமானை வேண்டுகிறார். ஆண்டாளைத் தன்னிடம் அழைத்து வர அரங்கனின் அழைப்பு கிடைக்கிறது. கோலாகலத்துடன் ஆண்டாளைத் திருவரங்கத்துக்கு அழைத்துச் செல்கிறார் பெரியாழ்வார். அங்கே, அரங்கனுடன் ஆண்டாள் கலந்து தன் அவதாரப் பெருமையை நிறைவு செய்கிறாள்.

பங்குனி உத்திரத் திருநாளில் ஆண்டாள் பெருமாளால் ஆட்கொள்ளப்பட்டு வதுவை கொண்ட வைபவம், திருவரங்கத்திலேயே நிகழ்ந்ததாக ஒரு வரலாறும்; பெரியாழ்வாரின் விருப்பத்துக்கு இணங்க ஸ்ரீவில்லிபுத்தூரில் நிகழ்ந்ததாக ஒரு வரலாறும் கூறுகிறது.

இதோ இந்தத் தலத்தில் 'வடபத்ரசாயி' என்னும் பெயர் கொண்டு சேவை சாதிக்கும் பெருமாள், ஆண்டாள் நாச்சியார் சூடிக் கொடுத்த மாலையை ஏற்று ஆனந்த தத்துவமாய்ச் சிரிக்கும் சிரிப்பில் சிந்தும் மாயங்கள் எத்தனை... மாயையை அறுத்து முக்தி தரும் மகிமைகள்தாம் எத்தனை! எத்தனை!

இந்தத் திருத்தலத்தில் நிகழும் ஆறு கால பூஜையிலும், மாண்பு மிக்கது - அந்த மாலை சூடும் விசுவரூப தரிசன பூஜைதான்!

பெண்கள் தம் மலர்க் கரங்களால் தொட்டுக் கணவனைத் துயிலெழுப்புவார்கள். ஆண்டாளோ தான் அணிந்த துளசி மலர் மாலையை அனுப்பி, நாயகனாம் கண்ணனைத் துயிலெழுந்து விசுவரூப தரிசனம் அளிக்கச் செய்கிறாள்!

திருமாலின் விசுவரூப தரிசனம் கண்டு தொழுது நிற்கிறோம்... பிராட்டியாரான ஸ்ரீதேவியும், பூதேவியும் திருவடிகள் பற்றி நிற்க; நாபிக்கமலத்தில் பிரம்மா எழுந்தருளியிருக்க; பஞ்சாயுதங்களான சங்கு, சக்கரம், கதை, கத்தி, வில் ஆகியவை பஞ்சமூர்த்திகளாகச் சேவித்து நிற்க; தும்புரு, நாரதர் முதலான தேவர்கள், முனிவர்கள் சூழ்ந்து நிற்க; சூரியன் - சந்திரன், பிருகு, மார்க்கண்டேயன் ஆகியோர் வணங்கி நிற்க - அந்தத் திருக்கோலம் கண்ட கோடானு கோடி பக்தர்கள் மனம் கனிந்து உருகி நிற்க - எம்பெருமான் யோக சயனத்தில் பள்ளிகொண்டிருக்கிறார்.

வடபத்ரசாயியின் அழகுக்கு அழகாக அணி செய்து மணம் வீசிப் பொலிகிறது ஆண்டாள் நாச்சியார் சூடிக் கொடுத்து அனுப்பிய மாலை... அந்த மாலையை வைத்து மாதவன் நடத்தும் மாய நாடகம் அத்தோடு முற்றுப்பெறவில்லை... ஆண்டாளின் மாலை அரங்கன் மார்பை அலங்கரித்ததோடு அமைந்துவிடவில்லை.

அதன்பின் அதைக் களைந்து அருகே தனிக்கோயில் கொண்டு நித்ய தவம் செய்யும் பெரியாழ்வாருக்குப் பிரசாதமாக அனுப்பப்படுகிறது. ஆம்; ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலை 'அபசாரமானது' என்று பெரியாழ்வார் நினைத்தார் அல்லவா? அதே மாலையை என்றென்றும் பெருமாளின் பிரசாதமாக ஏற்று அனுபவிக்கிறார், பெரியாழ்வார்!

இதன் பின்னணியில் அமைந்திருக்கும் அந்தத் தத்துவம்–,

இறைவனிடமே கரம்கூப்பி நிற்கிறோம்... புவனங்களைத் தன் பொன்னொளிர் புன்னகையாலே காத்து நிற்கும் அந்தக் கார்மேக வண்ணன் வேதங்களின் கருப்பொருளாய் சிரிக்கின்றான்.

வேதவிளக்காய் ஜொலிக்கும் அவன் சிரிப்பில் புரியாத புதிர்கள் புலப்படுகின்றன... அஞ்ஞானத் திரைகள் அகலுகின்றன... ஜெகஜோதியான அவன் சிரிப்பொலியில் மெய்ஞ்ஞானம் பூத்துச் சிரிக்கின்றது.

பக்தி செய்யும் பாதையை உலகுக்குக் காட்டவே பாற்கடல் நாயகியான லட்சுமிதேவி ஆண்டாளாக இந்த பூமியில் அவதரித்தாள்...

மனிதகுலம் முதல் அத்தனை ஜீவராசிகளும் மாதவனின் ஓர் அம்சம் என்று உணர்த்தவே மானிடப் பெண்ணாக தேவி அவதரித்தாள். மாதவனின் பொற்பாதக் கமலங்களைப் பற்றிக் கொள்ள மனிதர்கள் செய்ய வேண்டுவது வேறொன்றுமில்லை...

உள்ளமே கண்ணன் நினைவாய் – அவன் பேரில் பேரின்பக் காதலாகிக் கசிந்துருகினால் போதும்! கண்ணன் கைகொடுத்து ஆட்கொள்வான். இதுவே கோதையாக தாயார் அவதரித்து நிகழ்த்திக் காட்டிய பக்திக் கதையின் தத்துவ சாரம்...

மாலையைச் சூடிக் கொடுத்த அந்த மகத்துவத்தின் பொருள் என்ன...? மாலை என்பது பகவானை அடைய மனிதன் கைக்கொள்ள வேண்டிய பக்தியுள்ளம்தான். பக்தியுள்ளத்தால் பரமனை உபாசித்து தொழுவது மாலையைக் கண்ணனுக்கு சாத்துவது போலாகும். பக்தியுடன் சரணாகதியாகி அவனுக்கு நம்மை சமர்ப்பித்து விட்டால், நம் எளிமையையும் பொருட்படுத்தாது, அவன் நம்மை தோளிலேற்றிக் கொள்கிறான். அவன் அன்பே ஓர் அருட்பிரசாதமாகி விடுகிறது.

இந்தத் தத்துவத்தை விளக்கத்தான் இந்தத் தலத்தில் அந்த மாலை நாடகம் ஆடினாரோ, எம்பெரு மான் திருமாலும் ஸ்ரீதேவி லட்சுமி பிராட்டியும்...?

**இனியவை 40**

"அரசன் யானைப் படைகளைக் கொண்டிருத்தல் இனிது. தசையைத் தின்று உடம்பை வளர்க்காமை இனிது. முல்லை நிலத்தில் ஆற்றினது நீராட கரைக்கண் உள்ள ஊர் இனிது. அதுபோல மதிப்புடையவரது மதிப்பு கொள்ளுதல் இனிது."

'எல்லே இளங்கிளியே இன்னும் உறங்குதியோ!' என்று ஆண்டாள் நாச்சியார் தன் தோழிகளைப் பாவை நோன்புக்காக அழைக்கும் குரல் தோழிகளுக்காக மட்டுமல்ல; இந்தத் தொல்லுலகில் துயருற்றிருக்கும் ஒவ்வொரு ஜீவராசியையும் தோழமையோடு அழைத்து, கோவிந்தனின் அருள் முகத்தை நமக்குப் பெற்றுத் தர அழைக்கும் குரல் அது...

மாலே மணிவண்ணா! உன் கோலத் திருமார்பில் திருத்துழாய் பூண்டு, திருநாடு காக்கப் பறவையேறி வரும் பரமதயாளா! தாழ்வுற்ற மனிதப் பிறவிக்கு நின் தாமரை மலர் நாயகியோடு வாழ்வளிக்க வந்த வைகுந்தா! மாயவனே! மன்னுபுகழ் வடமதுரை மைந்தனே! தூயனே, எங்கள் நாயகனே! ஆயர் குலத்துதித்த மணிவிளக்கே! நின் நாமம் பாடி, நீள்பிறவி அறுக்க பொன்னொளிபோல் வழிகாட்டினாய்... பற்றினோம் நின் பொற்பாதம், போற்றி! போற்றி!

மகளிர் மன்றம்

# செல்போனும்



ஓம் சக்தி 40-வது ஆண்டு சிறப்பிதழின் புதிய பகுதி இது. இந்தப் பகுதி பல விஷயங்களையும் அலசிப் பார்க்கும் பகுதி. இரண்டு பெண்கள் மட்டுமே பங்கேற்கும் இந்தத் தொடரில் தேவைப்படும்போது துணைப் பாத்திரங்களாகச் சிலர் பங்கேற்கவும் வாய்ப்பு உள்ளது. இந்தப் பகுதியைப் படித்துவிட்டு உங்கள் கருத்துகளை எங்களுடன் பகிர்ந்துகொள்ளுங்களேன்...

-பொறுப்பாசிரியர்

லலிதா. குடும்பத்தலைவி. பெரிய புரட்சிப் பெண்மணி எல்லாம் கிடையாது. ஆனா, மரபை மதிக்கத் தெரிஞ்ச அதே நேரம் புதுமையை வரவேற்கத் தெரிஞ்சவங்க. மனைவியா, மருமகளா தன் கடமைகளை சரியா செஞ்சாலும் தன் தனித்துவமான அடையாளத்தை இழக்காதவங்க. இசை, ஆன்மிகம், இலக்கியம், அரசியல்னு எல்லாத்துலையும் இவங்களுக்குக் கருத்துகளும் சிந்தனைகளும் உண்டு.

இவங்க லதா. லலிதாவோட நாத்தனார். வீட்டோட லிட்டில் பிரின்ஸஸ்ங்கிறதால எப்பவும் செல்லம் ஜாஸ்தி. இந்தக் காலத்துப் பொண்ணுன்னு யாரையாவது சொல்லணும்னா அது லதாவுக்குத்தான் பொருந்தும். சோஷியல் மீடியால ஆக்டிவானவங்க. இவங்களோட ரீல்ஸுக்கு ஏகப்பட்ட ஃபேன்ஸ் இருக்காங்க. அதுக்காக எந்த அலட்டலும் இருக்காது.

லலிதா வடக்குன்னா லதா தெற்கு. ஆனா பாருங்க இவங்க ரெண்டு பேரும்தான் நல்ல நண்பர்களா இருக்காங்க. அது எப்படித்தான் ஒத்துப்போகுதுன்னு வீட்டுல மட்டும் இல்லைங்க ஊருக்குள்ளையும் பலருக்கு சந்தேகம் இருக்கு. அணைக்க மறந்த எக்ஸாஸ்ட் ஃபேன் மாதிரி எப்பவும் எதையாவது பேசிக்கிட்டே இருக்கிறதுதான் இவங்க ரெண்டு பேரோட ஸ்பெஷாலிட்டி. ஆனா இவங்க பேசுறது எல்லாமே ட்ரெண்டியான டாப்பிக்கா இருக்கும். வாங்க இன்னைக்கு என்ன பேசுறாங்கன்னு கேட்போம்.

“ஹோய்... என்ன ஆச்சு... ஏன் காலைல இருந்து டல்லாவே இருக்க? கவச குண்டலம் மாதிரி உன் உடலோடையே ஒட்டிக்கிட்டிருக்கும் உன் செல்போனை வேற கைல காணோம். ரிப்பேரா?”

லதா அண்ணியின் கிண்டலை ரசிப்பதாக இல்லை.

“அண்ணி, போனெல்லாம் நல்லாத்தான் இருக்கு. நான்தான் ஆஃப் பண்ணிட்டேன். வர வர சோஷியல் மீடியால இருக்கவே பிடிக்கலை”

“என்ன திடீர் ஞானோதயம்... எவனாவது உன் ரீல்ஸ்ல வந்து தப்பாக் கமெண்ட் பண்ணிட்டானா?”

“அப்படி எவன் கமெண்ட் பண்ணினாலும் நான் கண்டுக்கமாட்டேன். பிளாக் பண்ணிட்டுப் போய்ட்டே இருப்பேன். இது வேற... பொதுவாவே பெண்களை அநாகரிகமா பேசுற தளமா சமூக வலைதளங்கள் மாறிக்கிட்டே வருது. எவ்வளவு சாதிச்சாலும் எந்த உயரத்துக்குப் போனாலும் நீ பொண்ணுதான்னு மட்டம் தட்ட ஒரு கூட்டமே காத்திருக்கு. இதுல

# ஹார்மோனும்...

**லலிதா - லதா வோட டிரெண்டி டாக்**

எத்தனை பேரை பிளாக் பண்றது... எத்தனை பேரைத் திருப்பித் திட்றது... அதான் பேசாம எல்லாத்துல இருந்தும் வெளிய வந்துடலா மான்னு இருக்கு" என்ற லதாவை வியப்போடு பார்த்தாள் லலிதா.

பின் அவள் அருகில் வந்து அமர்ந்துகொண்டாள்.

"ஆச்சர்யமா இருக்கே... 2K கிட் லதாவா இப்படிப் பேசுறது... எப்பப் பாரு சமூக வலைத்தளத்திலேயே குத்த வச்சி உட்கார்ந் திருக்கிறது... அப்புறம் அவன் அப்படி சொல்லிட்டான்... இவன் இப்படி கமெண்டிட்டான்னு சொல்லி மொத்தமா வெறுத்துப்போய் இப்படி உட்கார்ந்திட வேண்டியது... என்னமோ போ"

"அண்ணி, ஒவ்வொரு காலத்துல ஒவ்வொரு ஊடகம். எனக்குத் தெரிஞ்சி உங்க காலத்துல ரேடியோ இல்லைன்னா டேப் ரிக்கார்டரா இருந்திருக்கும். அதுவழியாத்தான் நீங்க உலகத்தைப் பார்த்திருப்பீங்க... கேட்டிருப்பீங்க..."

"ஏன் கிராமபோன் பெட்டியையும் சேர்த்துக்கோயேன்... எனக்கென்ன 60 வயசா ஆய்டுச்சி... என்னதான் 90's கிட்ஸா இருந்தாலும் எங்காலத்துலேயெ சிடி, டிவிடி எல்லாம் வந்திடுச்சி. சேட்டிலைட் சேனல்னு ஒண்ணு உருவாகி வளர்ந்த அழகைப் பார்த்து ரசிச்சவங்க நாங்க. இன்னைக்குதான் கூகுள், க்ரோம், இண்டெர்நெட் எக்ஸ்பிளோரர். அன்னைக்கெல்லாம் நெட் ஸ்கேப்புன்னு ஒண்ணு இருந்தது. ஹாட்மெயில்லதான் அக்கௌண்ட் வச்சிருந்தோம். மெல்லமா சுத்தி சுத்தி ஒரு இமேஜ் லோடு ஆகி அதைப் பார்க்கிற சந்தோஷமே தனி. சரி சரி அதெல்லாம் இப்போ எதுக்கு, உன் பிரச்னையை மட்டும் சொல்லு"

"பார்த்தீங்களா... ஏதோ ஒண்ணு சொல்லப்போய் பூமர் அங்கிள் மாதிரி நீங்க பூமர் ஆண்ட்டியாயிட்டீங்க" என்று சொல்ல, லலிதா லதாவை அடிக்கக் கையை ஓங்க லதா தப்பித்து மாடிப் படிகளில் ஏறி மொட்டைமாடிக்குச் சென்றாள். லலிதாவும் பின்னாலேயே வந்து அவள் காதைப் பிடித்து செல்லமாகத் திருகி

"வர வர உன் வாலுத்தனம் ரொம்ப ஜாஸ்தி ஆய்டுச்சி... அது என்னடி பூமர் ஆண்ட்டி..."

"அண்ணி, அதெல்லாம் கேக்காதீங்க... வேணும்னா நீங்களே நெட்ல போய்த் தேடிப் பாத்துக்குங்க..."

"ஏன் எதாவது தப்பான அர்த்தமா... உன்னை..." என்று மீண்டும் அடிக்கப்போக

"அண்ணி, அண்ணி அதெல்லாம் இல்லை... சும்மா அட்வைஸ் பண்ற ஆண்டி, அங்கிளைத்தான் பூமர் சேர்த்து சொல்றோம்" என்றாள்.






அண்ணி பெருமூச்சு விட்டாள். மொட்டைமாடியில் வீசிய சுகமான காற்று அவள் மனநிலையை மாற்றியது.

“இந்தக் காலத்துப் பசங்களுக்கு நல்லது கெட்டதைச் சொல்லவே கூடாதுன்னு சொல்றீங்க. உங்களுக்கு ஃபிரெண்ட், பிலாசபர், கைடு எல்லாமே செல்போனும் மீடியாவும்தான்... நம்ம வீட்டுக்கு தினமும் பேப்பர் வருது. நாலு மாதப் பத்திரிகை வருது. என்னைக்காவது அதுல ஒண்ணையாவது எடுத்துப் படிச்சிருக்கியா...”

“அண்ணி, நீங்க சொல்ற மாதப் பத்திரிகையோ, தினசரியோ அதுல என்ன வருது... நடந்து முடிஞ்ச செய்தி. அதெல்லாம்தான் செல்போன் மூலமா சோஷியல் மீடியா மூலமா எங்க கைக்கு உடனே வந்துடுதே... சொல்லப்போனா எல்லாருக்கும் தெரிஞ்ச செய்தியைத்தானே பேப்பர்ல வெளியிடுறாங்க”

“இல்லை லதா. நீ தப்பாப் புரிஞ்சிக்கிட்டு இருக்க, ஒரு பத்திரிகைங்கிறது வெறும் செய்தி சொல்ற பொருள் மட்டுமில்லை. அதுல செய்திகள் சார்ந்த சாதக பாதகமான விஷயங்கள் எல்லாம் இருக்கும். அது மட்டுமல்ல, கலை, அறிவியல், இலக்கியம், பண்பாடுன்னு எல்லாம் சேர்ந்தது தானே ஒரு பத்திரிகை”

“கரெக்ட், நான் இல்லைன்னு சொல்லலை. ஆனா அதெல்லாம்தான் இதுலையும் இருக்கே... அப்புறம் எதுக்குத் தனியாப் பத்திரிகை...”

“நல்லாக் கேட்ட... கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி நீ என்ன சொன்ன... சோஷியல் மீடியால இருக்கவே முடியலை. எவ்வளவு சாதிச்ச பொண்ணா இருந்தாலும் அவளைப் பொண்ணுன்னு சொல்லி பாலியல் ரீதியா அவளை முடக்கப் பாக்குறாங்கன்னு வேதனைப் பட்டேல்ல. அதுக்கு என்ன காரணம் தெரியுமா?” என்று கேட்க லதா ஆர்வமாக லலிதாவையே பார்த்தாள்.

“கட்டற்ற சுதந்திரம். என்ன வேணும்னாலும் பேசலாம். என்ன வேணும்னாலும் எழுதலாம். கலாசாரம், பண்பாடு குறித்த பிரக்ஞை தேவையில்லை. ஆபாசமும் அருவருப்பும் எல்லை மீறிப் புழங்கினாலும் கேட்க யாரும் இல்லை. வெளிச்சத்துக்கு வந்த பிறகுதான் மற்றவர்களின் கண்டனங்கள் எழும்பும். ஆனால், ஒரு பத்திரிகையில் அது போன்ற விஷயங்கள் பிரசுரமாவதற்கு முன்பே அதன் ஆசிரியர் அதை எடிட் செய்துவிடுவார்.

"உலகத்தையே இணைக்கிறதுதான் இணையம். ஆனா அது இப்போ தப்பான ஆள்கள் கைல சிக்கி மக்களைக் குழுக்குழுவா உடைச்சிக்கிட்டு இருக்கு. எனக்கு விருப்பமான ஆள், என்னோட அரசியல் தெரிவோட ஒத்துப்போகிற ஆள், என்னோட கட்சி ஆள், என்னோட நண்பன், என்னோட நிறுவனம்னு மனிதர்கள் ஆளுக்கு ஏற்ப உண்மையை நிர்ணயம் பண்றாங்க. வேண்டியவன் தப்பாவே பேசியிருந்தாலும் அதை சப்போர்ட் பண்ணிப் பேச ஒரு கூட்டமே தயாரா இருக்கு. ஆனா பத்திரிகைகள் அப்படி இல்லை. அது ஒரு ஒழுங்கோட

இயங்குகிற அமைப்பு. தன் வாசகர்களுக்குத் தரமானதைத் தரணும்ங்கிற விருப்பத்தின் அடிப்படையில் இயங்கும் நிறுவனங்கள் பத்திரிகைகள். அதுல அடுத்தவர்கள் மனசு புண்படும்படியாக செய்திகள் வெளியாவது மிகக் குறைவு. சில நேரங்களில் சில ஊடகங்கள் அப்படிப் ஒரு பக்க சார்போட செய்தி வெளியிட்டுத் தவறா நடக்கலாம். ஆனா அதுக்கும் சில கட்டுப்பாடுகள் இருக்கு. கேள்விகேட்க அமைப்புகள் இருக்கு.”

“அண்ணி, நீங்க என்ன சொல்றீங்க... சமூக ஊடகங்களிலேர்ந்து விலகிடலாம். மறுபடி பத்திரிகைகளுக்கே திரும்பிடலாம்னு சொல்றீங்களா...”

“ச்சேச்சே... அப்படி ஒரு நாளும் சொல்லமாட்டேன். இன்னைக்கு சமூக வலைத்தளங்கள்ல இதே பத்திரிகைகளின் பக்கங்களும் வர ஆரம்பிச்சிடுச்சே. அதனால முழுமையா அதைக் கைவிடச் சொல்ல மாட்டேன். காரணம், சமூக ஊடகம் ஒரு பெண் கையில் கிடைச்சிருக்கிற பெரிய ஆயுதம். அதன் மூலமா அவ உலகத்தோட தொடர்பில் இருக்கலாம். தன் திறமைகளை வெளிக்காட்டலாம். பிரச்னைகளைப் பேசலாம். மக்களோட கவனத்தை ஈர்க்கலாம்.

அதனால் ஒவ்வொரு பெண்ணுக்கும் சமூக வலைதள அறிமுகமும் பயன்பாடும் அவசியம். ஆனா அது ஒரு அளவோட இருக்கணும். அவ்வளவுதான். தொடர்ந்து அதிக அளவுல சமூக வலைத்தளச் செயல்பாட்டில் ஈடுபட்டிருக்கிற பெண்களுக்குப் பல உடல்நலப் பிரச்னைகளோட மனநலப் பிரச்னைகளும் வருதுன்னு பல ஆய்வுகள் மூலமா சொல்லியிருக்காங்க. மன அழுத்தம், சுய வெறுப்பு, உணர்வுக் கொந்தளிப்பு போன்ற பல பிரச்னைகளுக்கு இளம் பெண்கள் ஆளாகிறாங்கன்னு சொல்றாங்க. அப்படி ஒரு சோர்வுதான் இப்போ உனக்கும் வந்திருக்கு. இரவு நீண்ட நேரம் விழித்திருந்து செல்போனில் நேரம் செலவிடுறதால பெண்களுக்கு ஹார்மோன் இம்பேலன்ஸ் ஏற்படலாம்னு சொல்றாங்க. அதனால் பிற்காலத்துல பிரக்னன்ஸியிலிருந்து பீரியட்ஸ் வரைக்குமே பிரச்னைகள் ஏற்படலாம்னு சொல்றாங்க நிபுணர்கள்.

நல்லா ரீல்ஸ் பண்ணு. சேட் பண்ணு. ஜாலியா இரு. ஆனா எல்லாத்தையும் ஒரு அளவோட வச்சிக்கோ. தூங்கப் போறதுக்கு ஒரு மணி நேரம் முன்னாடி நெட்டை டிஸ்கனெக்ட் பண்ணிடு. அவசரத்துக்கு போன் வந்தாப் போதாதா... வந்த புதுசுல நீ யோகால்லாம் செய்வ. நான் அதைப் பார்த்திருக்கேன். மீண்டும் அதை ஆரம்பி. இல்லை என்னோட வா நடைப்பயிற்சி போகலாம். அதை விட்டுட்டு காலங்கார்த்தாலே கண்ணே திறக்காமல் பெட்ல செல்போனைக் கையால துழாவி அதை எடுத்துப் பார்த்துக்கிட்டு இருந்தீன்னா... சீக்கிரமே உனக்கு சோடா புட்டிதான். அப்புறம் உன் இஷ்டம்” என்று சொல்ல, லதா லலிதாவைக் கட்டிக்கொண்டாள்.

“என் செல்ல அண்ணி, நீங்க சொன்னதை கடைப்பிடிக்க டிரைப் பண்றேன். இந்த முடிவைக் கொண்டாட ரெண்டு பேரும் சேர்ந்து ஒரு ரீல்ஸ் பண்ணுவோமா” என்று கேட்க

“ஆள விடுடியம்மா எனக்கு வேலை கிடக்கு” என்று சொல்லிக் கிளம்பிப்போனாள் லலிதா. லதா அண்ணியைப் பார்த்துச் சிரித்தாள்.



# கொழுப்பு இல்லாத






## குதிரைவாலி கொள்ளு கஞ்சி

**நான்கு நபர்களுக்கானது**

**தேவையானவை**

குதிரைவாலி அரிசி - 2 கப்

கொள்ளு - கொள்ளு 1 கப்

உப்பு - தேவையான அளவு

**செய்முறை:**

அடுப்பில் வெறும் வாணலியை வைத்து கொள்ளை வாசனை வரும்வரை வறுத்து தண்ணீரில் சுமார் இரண்டு மணிநேரம் ஊறவைக்கவும். பிறகு குதிரைவாலி அரிசியை நன்றாகக் கழுவி குக்கரில் போட்டு அதில் வறுத்து ஊறவைத்த கொள்ளு மற்றும் சிறிது உப்பையும் சேர்த்து மூழ்கும் அளவுக்குத் தண்ணீர் விட்டு வேகவைக்கவும். இரண்டு அல்லது மூன்று விசில் வந்ததும் நன்றாகக் குழைந்துவிடும். அதையும் மத்தால் கடைந்து அடுப்பில் வைத்து சிறிது தண்ணீர் சேர்த்து கிளறி இரண்டு நிமிடம் கொதிக்க விட்டு இறக்கவும். வாசனையான குதிரைவாலி கொள்ளு கஞ்சி தயார். கொழுப்பை கரைப்பதுடன் உடலில் சர்க்கரையின் அளவையும் கட்டுக்குள் வைக்கிறது.

மீனாட்சி




# உணவுகள்

## வெந்தயப்பொடி சாதம்

இன்றைக்கு பலருக்கும் தலையாய பிரச்னையாக இருப்பது கொலஸ்ட்ரால் பிரச்னைதான். இதற்குக் காரணம் ஆரோக்கியமற்ற வாழ்க்கை முறையும், கொழுப்பு நிறைந்த உணவுகளை அதிகம் உட்கொள்வதும்தான். அப்படி உடலில் சேர்ந்துள்ள கொழுப்புகளை எளிதாக அகற்ற சரியான உணவுமுறையை மேற்கொண்டாலே போதும். கொழுப்பு இல்லாத ரெசிப்பிகள் இரண்டு இங்கே...

**தேவையானவை:**

**இரண்டு நபர்களுக்கு**

பச்சரிசி - 100 கிராம்

வெந்தயம் - 1 டீஸ்பூன்

வரமிளகாய் - 2

கடலை பருப்பு - அரை டீஸ்பூன்

உளுத்தம்பருப்பு - அரை டீஸ்பூன்

கடுகு - அரை டீஸ்பூன்

கறிவேப்பிலை - சிறிது

நெய் அல்லது நல்லெண்ணெய் - 1 டீஸ்பூன்

மஞ்சள்தூள், பெருங்காயத் தூள், உப்பு தேவையான அளவு

வெந்தயத்தின் கசப்புச் சுவை தெரியாமல் இருக்க வேண்டுமானால் சிறிது சர்க்கரை சேர்த்துக் கொள்ளலாம்.

**செய்முறை:**

வெறும் வாணலியில் வெந்தயம், வரமிளகாய், தேவைப்பட்டால் சிறிது மிளகு சேர்த்து நன்றாக வறுத்து ஆறிய பிறகு பொடி செய்து வைத்துக்கொள்ளவும். இதற்கிடையில் பச்சரிசியை நன்றாகக் களைந்து உதிரியாக இருக்கும்படி சாதம் வடித்துக்கொள்ளவும். பிறகு வாணலியில் நெய் அல்லது நல்லெண்ணெய் விட்டு சூடானதும் கடுகு கடலை பருப்பு, உளுத்தம்பருப்பு, கறிவேப்பிலை, பெருங்காயத்தூள் தாளித்து, சிறிது மஞ்சள்தூள், சிறிது சர்க்கரை சேர்க்கவேண்டும். பிறகு உதிரியாக வடித்த சாதம், பொடி செய்து வைத்திருக்கும் வெந்தயம் மற்றும் மிளகாய்ப் பொடி, உப்பு சேர்த்துவிட்டால் வெந்தயப்பொடி சாதம் தயார்.

# இனியவை 40

1. சின்னஞ்சிறு குழந்தைகளின் தள்ளாடும் நடையைக் காண்பது பெற்றோர்க்கும் உற்றோர்க்கும் இனியது. அக்குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்பது தேவாமிர்தத்தினை விட இனியது. தீய செயல்களைச் செய்தவன் அதன் பயனாகத் துன்பம் வந்து அவன் மனம் நொந்து வருந்தும் போதும் மனம் அஞ்சாது இருப்பது இனியது.

2. கற்றறிந்தவர் முன் தான் கற்ற கல்வியைச் சொல்வது மிக இனியது. அறிவால் மேம்பட்ட கல்வியாளரைச் சேர்ந்து பொருந்தியிருப்பது மிகப் பெருமையுடன் முற்றிலும் இனியது. எள்ளளவாவது, தான் பிறரிடம் யாசிக்காமல், தான் பிறர்க்குத் தானம் கொடுத்துத் தர்மம் செய்வது எல்லா விதத்திலும் மிக இனியது.

3. தன்னுடன் நட்புடையவர்க்கு இனிய உதவிகளைச் செய்வது இனிமையானது. எந்தவகையிலும் சேராத தன் பகைவரையும் நட்பாக்கிக் கொள்வது அதைவிட மிக இனிமை யானது. பற்பல வகை உணவுப் பழக்கமுடை யவரானாலும் புறத்தார் பார்வைக்கு ஏதுவாக மெய்க்காப்பு வீரரோடு அரணாகப் பொருந்தியிருப்பது இனிமையானது.

4. ஊர்ப்பொது மன்றத்தில் மூத்த அறிவுடையோர் வாழ்கின்ற ஊர் இனியது. அறநூல்களில் சொல்லிய விதிப்படி வாழ்கின்ற தவத்தோரது மாட்சிமை இனியது. குறைவில்லாத மிகுந்த சிறப்பினை உடைய இரு முதுமக்களாகிய தாய் தந்தையரை காலையில் அவர்கள் இருக்குமிடம் சென்று பார்த்து அவர்கள் பாதங்களில் வீழ்ந்து வணங்கி எழுவது இனியது.

5. தன்னிடம் நட்புக்கொண்டவர்களைப் பற்றிப் புறங்கூறாதவனாய் வாழ்வது மிக இனியது. சத்தியத்தைப் பேணிப் பாதுகாத்து யாவர்க்கும் பணிவுடன் நடப்பது அதைவிட இனியது. குறையில்லாத பெரும் பொருளைத் தேடிச் சம்பாதித்தால் அப்பொருளைத் தகுதி வாய்ந்த தேவையுள்ளோர்க்கு கொடுத்து உதவுவது இனியது.

6. வஞ்சகரைச் சாராமல் அவர்களது தொடர்பை விட்டு விடுவது இனியது. கற்றறிந்த அறிவுடையாருடைய வாய்ச் சொற்களைப் போற்றி அதன்படி நடப்பது இனியது. அகன்ற இடத்தையுடைய இப்பூமியில் வாழ்கின்ற எல்லா உயிர்களுடனும் இணக்கமாக வாழ்வது இனியது.

7. பிறருடைய கைப்பொருளை அபகரிக்காமல் வாழ்வது இனியது. தர்மம் செய்து பாவத்தை நீக்குதல் இனிது. மாட்சிமை இல்லாத அறிவிலிகளைச் சேராத வழிகளை ஆராய்ந்து வாழ்தல் இனிது.

8. தன் வருவாய்க்கு ஏற்றார் போன்று கொடுத்தல் இனிது. ஒருவனுக்குச் சார்பாகாத ஒழுக்கம் இனிது. பெரிய யானையை உடையவராயினும் தாம் விரும்பியவற்றை ஆராயாது செய்யாதவராய், தம் இயல்பிலிருந்து மாறாதவராய் வாழ்தல் இனிது.

9. சோலையுடன் கூடிய பொதுக் குளத்தை வெட்டுதல் இனிது. அந்தணர்க்குப் பசுவோடு பொன்னைக் கொடுத்தல் இனிது. பாவத்திற்கு அஞ்சாமல் சூதாடுகிறவர்களை நீக்கி வாழ்தல் இனியது.

10. மேம்படுத்தலை விரும்பி கோபம் இல்லாமல் இருப்பவனின் தவம் இனியது. எடுத்துக் கொண்ட வேலையை முடிக்கும் ஆற்றல் உடையவனின் பொறுமை மிக இனிது. தம்மிடம் இல்லாத பொருளை நினைத்து துன்பப்படாமல் இருப்பது இனிது.

11. ஐந்து வழியால் வருகின்ற ஆசைகளை அடக்குதல் இனிது. கையில் நிற்கக்கூடிய பொருளைப் பெறுவதாக இருந்தாலும் கல்லாதவரை விடுதல் இனிது. இந்த உலகம் நிலையானது என்போரின் நட்பினைக் கை விடுதல் இனியது.

12. ஒரு பொருளை விரும்பித் தன்னை அடைந்தவர்களின் விருப்பத்தை நிறைவேற்றுதல் இனிது. மதிப்பு இல்லாதவிடத்து வாழாதவனின் மனவெழுச்சி இனிது. எப்படியானாலும் பிறருக்குக் கொடுக்கும் பொருளை மறைக்காதவனின் அன்பு மிகப்பெரியது.

13. அபயம் கொடுப்பவனின் ஆண்மை மிக இனிது. மானம் இழந்து வாழாமை இனிது. குற்றம் கூறாதவரின் உறுதி இனிது. நன்மையானவற்றை முறைப்படிப் பெறுதல் இனிது.

14. ஒரு வேலையைச் செய்யத் தெரியாதவனிடத்து ஒரு வேலையைக் கொடுக்காமை இனிது. எமனின் வருகையை எதிர்பார்த்து வாழ்வது இனிது. செல்வம் இழந்தாலும் பாவச் சொற்களைக் கூறாதிருப்பது எல்லாவற்றையும் விட இனியது.

15. கீழ் மக்களை நீக்கி வாழ்தல் இனியது. தன் உயர்வினை நினைத்து ஊக்கத்துடன் வாழ்தல் இனிது. வறியவர் என்று இகழாது புகழ்பட வாழ்தல் இனிதாகும்.

16. ஒருவர் செய்த உதவியினை நினைத்து வாழ்தல் இனிது. நீதி சபையில் நடுநிலை தவறாமல் இருத்தலின் பெருமை இனிது. யாருக்கும் தெரியாது என்று அடைக்கலமாய் வந்த பொருளை அபகரிக்காமல் இருத்தல் இனிதின் இனிது.

17. தம்மை அடைக்கலமாக வந்தவன் துன்பத்தை நீக்குவது இனிது. கடன் வாங்கியாவது செய்ய வேண்டிய வற்றைச் செய்வது இனிது. மிகச் சிறந்த நுட்பமான அறிவுடையவர்களாக இருந்தாலும் ஒரு பொருளை ஆராய்ந்து உரைப்பது இனிது ஆகும்.

18. கற்று அறிந்தவர்கள் கூறும் கருமப் பயன் இனிதாகும். அன்பில்லாத அரசனின் கீழ் வாழாதிருத்தல் இனிதாகும். ஆராயாமல் கெடுதல் செய்தவர்களுக்கு தீங்கு செய்யாமல் அன்புடையவராக இருத்தலைப் போன்று இனியது வேறு இல்லை.

19. ஊர் வெறுக்காதவற்றைச் செய்து வருபவனின் ஊக்கம் இனிதாகும். சோம்பல் இல்லாது முயற்சி உடையவனின் ஆண்மை இனிதாகும். வாள் கலக்குகின்ற போரில் மாறாத பெருமை உடைய அரசர்களின் படைகளை எதிர்த்தல் ஓர் அரசனுக்கு இனிதாகும். ●

# கிடைக்கவேண்டியதுதான் கிடைக்கும்...

சீலகம்பட்டி கிராமத்தில் கொத்தனார் கந்தன் வாழ்ந்து வந்தான். நாலைந்து மைல்களுக்கு அப்பாலுள்ள தலையம்பட்டி கிராமத்தில் கொத்து வேலை செய்திட இலுப்பங்காடு வழியே தினமும் செல்வது வழக்கம்.








ஒருமுறை தலையம்பட்டி கிராமத்தில் ஒரு வீட்டின் கூரையை மாற்றித் தருவதற்காக கட்டணமும் பேசி முடித்துவிட்டான் கந்தன்

தலையம்பட்டி கிராமத்துக்குச் சென்று கொண்டிருந்த போது, ”கந்தா, கொத்தனார் கந்தா, இங்கே கொஞ்சம் வா” என்ற குரல் கேட்டது. முதலில் திடுக்கிட்டு பயந்து போனான் கந்தன். மீண்டும் அதே குரல் கேட்டது.



கதை: கே.நித்யா | ஓவியங்கள்: ரமணன்

திரும்பிப் பார்த்தான் கந்தன். பயங்கரமாக வீற்றிருந்த ஐயனார் சிலையிலிருந்துதான் அந்தக் குரல் கேட்டது. அருகில் சென்ற கந்தன், "நான் ஒரு தவறும் செய்யவில்லையே, என்னை ஏன் அழைக்கிறீர்கள்?" என்று கேட்டான்.



“பயப்படாதே, உனக்குக் கீழே இருக்கும் மண்ணைத் தோண்டிப் பார்” என்று ஐயனார் மறுபடியும் பேசியதும், கந்தன் மறுபேச்சு பேசாமல் பூமியைத் தோண்டினான். ஒரு பானை நிறைய துவரம்பருப்பு அளவில் தங்கக் காசுகள் இருந்தன. ஆச்சர்யப்பட்டான் கந்தன்.





“உன்னுடைய மேல்துண்டில் இந்தப் பொற்காசுகளை மூட்டையாகக் கட்டிக்கொள்.” என்றார் ஐயனார். மண்பாண்டத்தில் இருந்த காசுகள் அனைத்தையும் தன் மேல்துண்டில் கட்டியபோது, “எல்லாவற்றையும் துடைத்து எடுத்துவிடாதே. கொஞ்சம் மண்பாண்டத்தில் போட்டு முன்பு இருந்தது போலவே மூடி வைத்துவிடு.” என்றார் ஐயனார்.



கந்தனின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ‘இனி கொத்தனார் வேலை செய்து கடுமையாக உழைக்கவேண்டாம். நிம்மதியாக குடும்பத்தைக் காப்பாற்றலாம்’ என்று நினைத்து நினைத்து மகிழ்ந்தான்.



கூரை மாற்றும் வீட்டின் கூரைக் கம்பில் அந்த மூட்டையை மாட்டிவிட்டு வேலையில் ஈடுபட்டான் கந்தன். அந்த வீட்டுப் பெண்மணி, “இந்த மூட்டையில் என்ன இருக்கிறது கந்தா?” என்று கேட்டாள். “அதில் துவரம்பருப்பு இருக்கிறது” என்று பொய் சொல்லிவிட்டான் கந்தன்.



அப்போது அந்தப் பெண்மணிக்கு துவரம்பருப்பு தேவைப்பட்டதால், 'கொஞ்சம் துவரம்பருப்பை எடுத்துக்கொண்டு விடுவோம். சாயங்காலத்துக்குள் கடைக்குப் போய் வாங்கி வந்து கொடுத்து விடலாம்' என்று நினைத்தபடி மூட்டையைத் திறந்தாள்.



மூட்டை நிறைய தங்கக் காசுகள்! அத்தனையும் அவள் வீட்டுப் பானைக்கு மாறியது. பிறகு அவள் கடைக்குச் சென்று துவரம்பருப்பு வாங்கி வந்து முன்பு போலவே மூட்டையில் போட்டுக் கட்டி வைத்துவிட்டாள்.



வேலை முடிந்து மாலையில் வீடு திரும்பினான் கந்தன். நடந்த விஷயத்தை மனைவியிடம் கூறியபடி மூட்டையைப் பிரித்துக் காட்டினான். அப்போது பேரதிர்ச்சி அவனுக்குக் காத்திருந்தது. ஆம். மூட்டையில் தங்கக் காசுகளுக்கு பதில் உண்மையாகவே துவரம்பருப்புதான் இருந்தது.



கந்தன் தான் வேலை செய்த வீட்டுக்குச் சென்று அந்தப் பெண்மணியிடம் தங்கக் காசுகளைக் கேட்ட போது அவள் ஒரேயடியாக தான் எடுக்கவேயில்லை என்று சாதித்து விட்டாள். மேலும், பஞ்சாயத்தைக் கூட்டி அவனை அவமானப்படுத்திவிட்டாள்



"ஐயனாரே, இப்படிச் செய்தது நியாயமா? அவள் எடுத்தது மட்டுமில்லாமல் பஞ்சாயத்தைக் கூட்டி என்னை அவமானப்படுத்திவிட்டாளே. இது நியாயம்தானா?" என்று அழுதான்.



'தன்னை ஆசை காட்டி மோசம் செய்துவிட்டாரே' என்று நினைக்க நினைக்க ஐயனார் மீது கோபம் கோபமாக வந்தது கந்தனுக்கு. ஒரே ஓட்டமாக ஐயனார் கோயிலுக்கு ஓடிச் சென்றான்.



ஐயனார் சிரித்தபடியே, "அந்தக் காசுகள் அந்தப் பெண்மணிக்குச் சேரவேண்டியவை. அவற்றை உன் மூலம் அவளிடம் சேர்ப்பித்தேன். அதற்குப் பிரதிபலனாக நான்கு தங்கக் காசுகளை பானையில் வைத்திருக்கிறேன். போய் எடுத்துக்கொள்" என்றார் ஐயனார்.



நீதி: யார் யாருக்கு என்ன கிடைக்கவேண்டுமோ அதுதான் கிடைக்கும். எல்லாம் இறைவனின் செயலே.

ஒரு கதை...
ஒரு நீதி..!

# வேண்டியது பூரண நம்பிக்கை மட்டுமே!

பலரும் தங்கள் பிரச்னைகளும் கஷ்டங்களும் நீங்கிட, ஆலயத்துக்குச் சென்று இறைவனிடம் பிரார்த்தனை செய்கின்றனர். தங்கள் பிரச்னையோ கஷ்டமோ தீரவில்லை என்றால், உடனே கடவுளிடம் தங்களுக்கு உள்ள நம்பிக்கையை இழந்து விடுகின்றனர்.

கடவுள் எப்போதுமே கருணை உள்ளவர். எவரிடத்தும் பேதம் பார்க்காதவர். பக்தர்களிடம் அவர் பொன், பொருள் என்று எதையும் எதிர்பார்ப்பதில்லை. அவர் எதிர்பார்ப்பது பூரணமான நம்பிக்கையை மட்டுமே. நாம் வழிபடுவது ஒரு கல் விக்கிரகம் அல்ல, சாட்சாத் அந்த தெய்வமே எழுந்தருளியுள்ளார் என்ற நம்பிக்கையுடன் வழிபடும்போது நம் பிரார்த்தனை நிறைவேறுவது மட்டுமல்ல, கடவுளின் தரிசனமும் நமக்குக் கிடைக்கக் கூடும் என்பதை, நம் புண்ணியபூமியில் பல மகான்கள் அனுபவித்து உணர்ந்து கூறியுள்ளனர்.

இங்கே ஒரு கதையைப் பார்ப்போம்...

ஒருவனுக்கு வாழ்க்கையில் எந்தக் கஷ்டமும் இல்லை என்றாலும், எப்படியாவது சிவபெருமானை தரிசிக்கவேண்டும் என்ற விருப்பம் மட்டும் அவனுக்கு இருந்தது. நீண்டகாலமாக சிவபெருமானின் திருவுருவத் துக்கு முன்பு அமர்ந்து பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான். ஆனாலும் சிவனாரின் தரிசனம் கிடைக்கவில்லை. கோபம் கொண்ட அவன் சிவனின் விக்கிரகத்தை பரண் மீது போட்டுவிட்டு, விஷ்ணுவை வழிபட ஆரம்பித்தான்.

தினமும் பூஜை செய்ய ஆரம்பித்து சாம்பிராணி, ஊதுவத்தி ஏற்றினான். சுகந்தமான நறுமணம் அறை முழுவதும் பரவியது. அந்த நறுமணத்தை சிவன் நுகரக்கூடாது என்று எண்ணி, பரண் மீது ஏறி சிவபெருமானின் மூக்கை துணியினால் கட்டிவிட்டு கீழே இறங்கினான்.

அவ்வளவுதான். உடனே அவன் முன்பு சிவபெருமான் காட்சி அளித்தார். மகிழ்ச்சியும் வியப்புமாக சிவபெருமானை வழிபட்டவன், இத்தனை காலம் தரிசனம் தராமல் தற்போது தரிசனம் தந்ததற்கான காரணத்தைக் கேட்டான்.

சிவபெருமான் கூறினார்:

"அப்பனே, நீ இத்தனை நாள்களாக என்னை வெறும் விக்கிரகமாகத்தான் பார்த்தாய். இன்றுதான் நான் அந்த விக்கிரகத்தில் இருப்பதாக நம்பி, அறையில் பரவியிருக்கும் சுகந்தத்தை நான் அனுபவித்துவிடக் கூடாது என்பதற்காக துணியைக் கொண்டு என் மூக்கைக் கட்டிவிட்டாய். எப்போது விக்கிரகத்தில் நான் இருப்பதாக முழுமையாக நம்பினாயோ அப்போதே நான் உனக்குக் காட்சி கொடுக்க வந்துவிட்டேன்" என்றார்.

●



# அம்பிகை சந்நிதிகளே இல்லாத தலம்!

பக்தர்கள் தெய்வத்தைத் தேடிச் செல்வார்கள். ஆனால், தெய்வமே பக்தர்களைத் தேடி வந்து அருள் செய்த அற்புதங்களும் காஞ்சித் தலத்தில் நிகழ்ந்திருக்கவே செய்கின்றன. இறைவனையே இந்த மண்ணுலகத்துக்கு வரவழைத்து, இந்த மண்ணிலேயே கயிலைக் காட்சியை நாம் தரிசித்து நலம் பெறும் வண்ணம் அருளினாள் அன்னை காமாட்சி!

கயிலையில் ஈசனுடன் ஏகாந்தமாக இருக்கும் வேளையில், அன்னை உமையவள் விளையாட்டாக ஈசனின் திருக்கண்களைத் தன் தளிர்க்கரங்களால் மூடினாள். அவ்வளவில் அண்டசராசரங்களும் இருண்டு விட்டன. அந்த இருளின் கருமை அன்னையின் மேனியிலும் படர்ந்தது. தன்கரியநிறம்மாற, கயிலைநாதனிடமே வழிகேட்டாள்.

''மண்ணுலகம் சென்று தவம் இயற்று. அவ்வேளையில் உன் கரிய நிறம் நீங்குவதுடன், மண்ணுலக மாந்தர்தம் வாழ்வில் சகல நன்மைகளும் உண்டாகும்” என்று சக்திக்கு அருளினார் இறைவன்!

அதன்படி பத்ரிகாசிரமத்தில் குழந்தையாகத் தோன்றிய அம்பிகை, காத்யாயன முனிவரால் வளர்க்கப் பெற்றாள். குறிப்பிட்ட காலம் வந்ததும், அவளிடம் சில பொருள்களைக் கொடுத்து, காசிக்குச் சென்று சில காலம் அறங்கள் செய்யும்படியும், பின்னர், தென் திசைக்குச் செல்லும்படியும், எந்த இடத்தில் தாம் கொடுத்த பொருள்கள் சிவனாருக்கு உரியதாக மாற்றம் பெறுகின்றனவோ அந்தத் தலமே அம்பிகையின் தவத்துக்கு உகந்த தலம் என்றும் கூறி அனுப்பினார்.

அதன்படி காசியில் அன்னபூரணியாக அறங்கள் இயற்றிய அம்பிகை, தென் திசைக்கு வந்து மாங்காட்டில் பஞ்சாக்னி நடுவில் ஊசிமுனையில் நின்று தவம் இயற்றினாள். சில காலம் சென்ற பிறகு காஞ்சிக்குப் பயணப்பட்டாள். காஞ்சித் தலத்தை அடைந்ததும், முனிவர் அவளிடம் கொடுத்த பொருள்கள் மாற்றம் அடைந்தன. புலித்தோல் சோம விருத்தமாக; குடம் குட தீபமாக; ருத்ராட்சம் வில்வ மாலையாக; குடை நாகாபரணமாக; யோக தண்டம் திரிசூலமாக; மணல் சிவலிங்கமாக மாறின. அங்கே, சிவ பூஜை செய்த அம்பாளுக்குப் பல சோதனைகளுக்குப் பிறகு சிவ தரிசனமும் கிடைத்தது.

இந்தத் தலத்தில்தான் அன்னை காமாட்சி தவிர்த்து மற்றொரு சக்தி இல்லை. ஆம். மற்ற அனைத்து சிவாலயங்களிலும் ஈசனே தனித்திருக்கிறார். அம்பாள் சந்நிதி இல்லை.

ஒருபுறம் அன்னபூரணி மறுபுறம் அருவமாக மகாலட்சுமி உடனிருக்க காமகோட்டத்தில் அருளாட்சி செய்து கொண்டிருக்கிறாள் அன்னை காமாட்சி! ●

அனுபவ மருத்துவம்

# நெஞ்சு சளியை விரட்டும் வழிகள்...



நுரையீரல்ல கோளாறு உண்டாகி மூச்சுத்திணறல் ஏற்பட்டு மரணமடைஞ்சவங்க பத்தி சமீப காலமா செய்திகள் வந்தவண்ணம் இருக்கு. அதுவும் இந்த கொரோனா காலகட்டத்துல அது பத்தின தகவலை அதிகமாகவே பார்க்க முடியுது. நெஞ்சில சளி கட்டிக்கிட்டா அதை சரிசெய்ய முடியாம பலரும் அவதிப் பட்டுட்டிருக்காங்க. இதுக்கெல்லாம் நம்ம பாரம்பரிய மருத்துவத்துல ரொம்ப சாதாரணமான சிகிச்சை முறைகள் நிறைய இருக்கு. இன்னும் சொல்லப் போனா இதுல பல ஆலோசனைகள் நம்ம பாட்டிமார் சொன்னதுதான். அதனால, இதைச் செஞ்சு முழுமையா குணம் பெறலாம்.

நெஞ்சில சளி கட்டியிருந்தா அதுல இருந்து நிவாரணம் பெற ஆடாதொடை இலை நல்ல மருந்தா பயன்படும். பச்சையா பறிச்சிட்டு வந்த ஆடாதொடை இலையை தண்ணி விட்டு கொதிக்க

எம்.மரிய பெல்சின்

வச்சி அதோட கொஞ்சம் கருப்பட்டி சேர்த்துக் குடிக்கலாம். இல்லைன்னா ஆடாதொடை இலையை காயவச்சி பொடியாக்கியோ, கசாயம் செஞ்சோ குடிக்கலாம். பொதுவா நுரையீரல் ஆரோக்கியமா இருக்கணும்னா அதுக்கு ஆடாதொடை நல்ல மருந்து. ஆடாதொடை மட்டுமில்லாம அதோட சம அளவு தூதுவளை இலை சேர்த்து காயவச்சி பொடியாக்கி தேன் சேர்த்து தினமும் காலை, மாலை நேரங்கள்ல சாப்பிட்டு வந்தா நெஞ்சுச்சளி கரைஞ்சு வெளியேறும். இப்பிடி செஞ்சா நுரையீரல் சம்பந்தமான நோய்கள் சரியாகும்.

ஆடாதொடை பொதுவா ரத்த நாளங்கள்ல உள்ள சளியை அகற்றுறதோட ரத்தத்தையும் சுத்திகரிக்கும். ரத்தத்துல உள்ள தேவையில்லாத உப்பையும், கொழுப்பையும் மாத்தி அமைக்கிற தன்மை ஆடாதொடைக்கு உண்டு.

ஆடாதொடை இலையை நிழல்ல காய வச்சிப் பொடியாக்கி தினமும் காலைல ஒரு ஸ்பூன் எடுத்து தேன்ல குழைச்சி குழந்தைங்களுக்கு கொடுத்திட்டு வந்தா சளி, இருமல், இரைப்பு பிரச்னைகள் சரியாகும். இதை முதல்ல அளவு குறைச்சி கொடுக்கலாம். அதுக்கு பிறகு வேணும்னா அளவை கூட்டிக்கிடலாம்.

இதுமாதிரி முசுமுசுக்கை இலையும் சளி தொடர்பான பிரச்னைகளுக்கு நல்ல மருந்து. மூச்சுக் குழல், நுரையீரல் மட்டுமில்லாம அதை ஒட்டி இருக்குற இடங்கள்ல வரக்கூடிய அலர்ஜி, ரத்தம் கொட்டுதல், புண் மட்டுமில்லாம மத்த எல்லா பிரச்னைகளையும் சரிபண்ணும். இது இல்லாம நீண்டநாள்களா வேற சில நோய்கள் வந்து கஷ்டப்பட்டு உடல் பலவீனமானவங்களுக்கும் முசுமுசுக்கை நல்ல பலன் தரும்.

முசுமுசுக்கை இலையை அரைச்சி தோசை மாவோட கலந்து தோசை சுட்டும் சாப்பிடலாம். முசுமுசுக்கை இலையில துவையல், சட்னி செஞ்சி சாப்பிடலாம். முசுமுசுக்கை இலைச்சாறோட நல்லெண்ணெய் சேர்த்துக் காய்ச்சி தலைக்குத் தேய்த்துக் குளிச்சா சைனஸ் பிரச்னை சரியாகும். இலையை நிழல்ல காய வச்சிப் பொடியாக்கி சாப்பிட்டா நுரையீரல் புற்றுநோய்கூட சரியாக வாய்ப்புகள் அதிகம்.

தூதுவளை இலையை துவையல் அரைச்சி சாப்பிட்டு வந்தாலும் நெஞ்சுச்சளி, நுரையீரல்ல கட்டியிருக்கிற கபம் வெளியேறும். குழந்தைகளுக்கு இரண்டு, மூணு தூதுவளை இலைகளோட சின்ன வெங்காயம், கல் உப்பு சேர்த்துக் கசக்கி சாறு எடுத்துக் குடிக்கக் கொடுக்கலாம். இது மாதிரி எளிய மூலிகைகள் சுவாசம் தொடர்பான நோய்களைக் குணப்படுத்தும். தூதுவளையோட கண்டங் கத்தரி இலை, ஆடாதொடை இலை சம அளவு எடுத்து நிழல்ல காயவச்சிப் பொடியாக்கி வச்சிக்கிடணும். இதுல ஒரு ஸ்பூன் அளவு எடுத்து தினமும் காலை, மாலை வேளைகள்ல தேன் சேர்த்துக் குழைத்து சாப்பிட்டு வந்தா சுவாசம் தொடர்பான பிரச்னைகள் சரியாகும். முக்கியமாக நுரையீரல் தொடர்பான எல்லா பிரச்னைகளும் சரியாகும்.

நாயுருவி விதையை இடிச்சி பொடியாக்கி தேன் இல்லன்னா பசுநெய் சேர்த்துச் சாப்பிட்டாலும் நுரையீரல் நோய்கள் எல்லாம் சரியாகும். புதினா, துளசி, இஞ்சி, மிளகு சேர்த்து நசுக்கிப்போட்டு தண்ணி விட்டு கொதிக்க வச்சி அதோட தேயிலை, சர்க்கரை, பால் சேர்த்துக் குடிச்சா ஜலதோஷம், இருமல் சரியாகும்கிறது கூடுதல் தகவல். இது எல்லாமே நம்மைச்சுத்தி, நாம வசிக்கிற இடங்கள்ல ரொம்ப சாதாரணமா வளரக்கூடிய மூலிகைகள் என்கிறதால அது எல்லாத்தையும் எடுத்து பயன்படுத்தி பலன்பெறலாம்.

●

# ராசிபலன்



மேஷம்

**(அசுவினி, பரணி, கார்த்திகை 1-ம் பாதம்)**

மிகவும் தைரியத்துடனும் உற்சாகத்துடனும் செயல்படும் மாதம். தங்களின் புத்திரர்கள் தாங்கள் செய்யும் தொழிலுக்கு உறுதுணையாக இருந்து தொழிலை முன்னேற்றம் அடையச் செய்வார்கள். குழந்தைகள் ஆரோக்கியத்துடன் காணப்படுவார்கள். தொழிலில் தாய்மாமனின் உதவி கிடைக்கும். தொழில் சம்பந்தமான பத்திரப்பதிவு மற்றும் கடன் வாங்கும் விஷயங்களில் சற்று கவனமுடன் நடந்துகொள்ளவும். உடன்பிறப்புகளால் ஆதாயம் உண்டு. கணவன் மனைவி உறவு மிகவும் அந்நியோன் யத்துடன் காணப்படும். தந்தையின் ஆரோக்கியத்தில் சற்று கவனம் தேவை. வியாபாரமோ வேலையோ எதுவாக இருந்தாலும் சில சமயம் கஷ்டப்பட்டுதான் வேலை பார்க்கவேண்டி வரும். மஹாலக்ஷ்மியை வழிபட அதற்கான ஆதாயம் நிச்சயம் கிடைக்கும். மொத்தத்தில் மிகவும் சிறந்த மாதமாக இது உங்களுக்கு அமையும்.

**சாதகமான நாள்கள்:** 1, 4, 6, 7, 9, 16, 19, 20, 21, 28

**சந்திராஷ்டம நாள்கள்:** 23 பிற்பகல் முதல் 24, 25 பிற்பகல் வரை



ரிஷபம்

**(கார்த்திகை 2,3,4-ம் பாதம், ரோஹிணி, மிருகசீரிடம் 1,2-ம் பாதம்)**

உங்களின் ராசிநாதன் சுக்கிர பகவான் மிகவும் வலுவுடன் இருக்கும் மாதமிது. தாங்கள் நினைத்த காரியங்களை சாதித்துக் கொள்வீர்கள். தங்களுக்குத் தேவையான ஆடை ஆபரணம் முதலியவற்றை வாங்கி மகிழ்ச்சி அடைவீர்கள். தனவரவு சிறந்து காணப்படும். பொருளாதாரம் சிறக்கும். வியாபாரம் சிறிது முன்னேற்றம் அடையும். குழந்தைகளால் அனுகூலம் உண்டு. தாயாரின் உடல் நலம் சிறக்கும். சிலருக்கு வெளி நாட்டில் இருந்து வேலை சம்பந்தமான நல்ல செய்தி வந்து சேரும். வெகு நாள்களாக திருமணம் ஆகாமல் இருந்தவர்களுக்கு திருமணம் கைகூடிவரும். வாழ்க்கைத் துணையின் உடல்நிலையில் சற்று கவனம் தேவை. சிலர் குடும்பத்துடன் குலதெய்வக் கோயிலுக்குச் சென்று வேண்டுதலை நிறைவேற்றுவீர்கள். அம்பாளை வணங்கவும்.

**சாதகமான நாள்கள்:** 2, 4, 7, 9, 12, 14, 18, 19, 22, 23

**சந்திராஷ்டம நாள்கள்:** 25 பிற்பகல் முதல் 26, 27 மாலை வரை



மிதுனம்

**(மிருகசீரிடம் 3,4-ம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3-ம் பாதம்)**

இந்த ராசியில் பிறந்தவர்களுக்கு இந்த மாதம் பண வரவு மிகுந்து காணப்படும். சிலருக்கு ஆடை ஆபரணச் சேர்க்கை ஏற்படும். தாயுடன் சற்று கருத்து வேறுபாடு ஏற்பட்டு பிறகு சரியாகும். அனுசரித்து நடந்துகொள்ளவும். பெண் குழந்தைகளின் உடல் நலனில் கவனம் தேவை. வீடு, நிலம் சம்பந்தமான விஷயங்களில் அரசு வழியில் ஆதாயம் உண்டு. நிலம் மற்றும் மனைக்கட்டு வாங்கும் எண்ணம் இருந்தால் மாதப் பிற்பகுதியில் வாங்கவும். வேலையில் உள்ளவர்கள் சுறுசுறுப்புடன் உழைத்து நல்ல பெயர் எடுப்பீர்கள். குடும்பத்தில் உள்ள பெண் குழந்தைகள் வகையில் சுபகாரிய நிகழ்ச்சி ஏற்படும். வீடு மற்றும் நிலம் சம்பந்தமான பத்திரப் பதிவு தள்ளிப் போடவும். உற்றார் உறவினருடன் மகிழ்ச்சி பேசிஅடைவீர்கள். பெருமாளை வழிபடவும். தந்தையுடன் வாக்குவாதம் தவிர்த்தல் நலம் பயக்கும்.

**சாதகமான நாள்கள்:** 4, 6, 8, 10, 14, 16, 19, 22, 23, 25

**சந்திராஷ்டம நாள்கள்:** 27 மாலை முதல் 28

## பிப்ரவரி மாத ராசிபலன் - 2022

மேஷம் முதல் மீனம் வரை 12 ராசிகளுக்கான ராசிபலன் அதிர்ஷ்டக் குறிப்புகள் மற்றும் எளிய பரிகாரங்களுடன் கணித்துத் தந்திருக்கிறார் ஜோதிடர் **பூமணி நாராயணன்,** B.A. (Tamil) M.Sc (Astrology)



**கடகம்**

**(புனர்பூசம் 4-ம் பாதம், பூசம், ஆயில்யம்)**

**உ**ங்களின் ராசிநாதனான சந்திரபகவான் மாதத்தில் அதிக நாள்கள் நல்ல நிலையில் உள்ளதால் தங்களின் உடல் நலம் சிறந்து காணப்படும். மாத முற்பகுதியில் சிறிய பயணம் மேற்கொள்வீர்கள். தந்தையின் உடல்நிலையில் கவனம் தேவை. இளைய சகோதர சகோதரிகளால் நன்மை உண்டு. அவர்களுக்காக செலவு செய்யும் சூழ்நிலை ஏற்படும். ஆடம்பரப் பொருள்கள் மற்றும் வீடு வாங்கும் எண்ணம் உள்ளவர்கள் அந்த எண்ணத்தை அடுத்த மாதத்திற்கு சற்று தள்ளிப் போடுங்கள். இதுநாள் வரை இருந்து வந்த அனாவசியமான செலவினங்கள் குறைந்துவிடும். குலதெய்வக் கோயிலுக்கு மாதத்தின் கடைசி நாள்களில் சென்று பிரார்த்தனைகளை நிறைவேற்றும் வாய்ப்பு ஏற்படும். வியாபாரத்தில் விற்பனையும் லாபமும் அதிகரிக்கும். வியாபாரத்தை விரிவுபடுத்தவோ அல்லது புதிய முயற்சிகளை மேற்கொள்ளவோ உகந்த மாதம்.

**சாதகமான நாள்கள்:** 6, 8, 11, 15, 16, 19, 22, 24, 27, 28

**சந்திராஷ்டம நாள்கள்:** 2, 3, 4 பிற்பகல் வரை



**சிம்மம்**

**(மகம், பூரம், உத்திரம் 1-ம் பாதம்)**

**தா**ங்கள் இந்த மாதம் மிகவும் சுறுசுறுப்புடனும் தைரியத்துடனும் செயல்படுவதால் மிகவும் முன்னேற்றமான மாதமாக அமைந்திருக்கும். தனவரவு மிகுந்து காணப்படும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். குழந்தைகளின் ஆரோக்கியம் சிறக்கும். கணவன் மனைவி இருவரும் ஒருவரையொருவர் அனுசரித்து நடந்துகொண்டால் குடும்பம் மகிழ்ச்சி அடையும். வியாபாரம் சுமாரான முறையில் நடக்கும். தாங்கள் எதிர்பார்த்த இடத்தில் இருந்து திடீரென்று பணவரவு வந்து சேரும். சிலருக்கு திடீரென திருமண ஏற்பாடு நடந்து திருமணம் நடந்தேறும். குடும்பத்துடன் ஒருமுறை குலதெய்வக் கோயிலுக்குச் சென்று வர எல்லா தடங்கல்களும் நீங்கி வாழ்வு வளமாகும். வெளிநாட்டில் உள்ள பிள்ளைகளிடமிருந்து நல்ல செய்தி ஒன்று வந்து சேரும்.

**சாதகமான நாள்கள்:**1, 2, 8, 11, 15, 19, 22, 25, 27, 28

**சந்திராஷ்டம நாள்கள்:** 4 பிற்பகல் முதல் 5, 6 இரவு வரை



**கன்னி**

**(உத்திரம் 2,3,4 -ம் பாதம் ஹஸ்தம், சித்திரை 1,2-ம் பாதம்)**

**உ**ங்களின் ராசிநாதனான புதன் பகவான் இந்த மாதம் முழுவதும் மிகவும் வலுவுடன் காணப்படுவதால் தங்களின் தேக ஆரோக்கியம் சிறந்து விளங்கும். வேலை மற்றும் தொழிலில் உள்ளவர்கள் மிகுந்த கௌரவமுடன் நடத்தப்படுவார்கள். குழந்தைகள் வழியில் சுபச்செலவுகள் ஏற்படும். தந்தையின் மூலம் அனுகூலம் கிடைக்கும். குடும்பத்தில் உள்ள பெண்மணிகள் மிகவும் மகிழ்ச்சியுடன் காணப்படுவார்கள். வீட்டிற்குத் தேவையான மின்னணு சாதனங்களை வாங்கி குடும்பத்தில் உள்ளவர்களை மகிழ்ச்சி அடையச் செய்வீர்கள். தாயுடன் கருத்து வேறுபாடு ஏற்பட்டு பிறகு சரியாகும். மாணவர்கள் ஹயக்ரீவரை வணங்க படிப்பில் முன்னேற்றம் மிகுந்து காணப்படும். தொழில் மற்றும் வியாபாரம் சிறக்கும். பணவரவு மிகுந்து காணப்படும். கலைஞர்களுக்கு சிறப்பான மாதமாக இருக்கும்.

**சாதகமான நாள்கள்:** 1, 4, 10, 11, 15, 18, 20, 24, 27

**சந்திராஷ்டம நாள்கள்:** 6 இரவு முதல் 7, 8, 9 காலை வரை





துலாம்

**(சித்திரை 3,4-ம் பாதம், சுவாதி, விசாகம் 1,2,3-ம் பாதம்)**

உங்கள் ராசிநாதன் சுக்கிர பகவான் மிகுந்த பலத்துடன் காணப்படுவதால், தாங்கள் விரும்பிய ஆடை ஆபரணங்களை வாங்கி மகிழ்ச்சி அடைவீர்கள். வீடு வாங்க வேண்டும் என நினைத்திருந்தவர்கள் தற்சமயம் வாங்க நல்ல யோகமான நேரம் இது. தந்தையின் உடல் ஆரோக்கியம் சிறந்து காணப்படும். வெளிநாட்டிலுள்ள உறவினர் ஒருவரிடம் இருந்து நல்ல செய்தி ஒன்று வந்து சேரும். குழந்தைகளின் உடல் நலனில் கவனமுடன் இருக்கவும். வீட்டில் வேலை பார்ப்பவர்களிடம் வாக்குவாதம் செய்ய வேண்டாம். மாத முற்பகுதியில் வியாபாரம் சிறக்கும். மாணவர்கள் பொறுப்புடன் படிப்பார்கள். இளைய சகோதர சகோதரிகளால் ஆதாயம் அடைவீர்கள். வீட்டு வேலையை பாதியில் நிறுத்தியவர்கள் மாதப் பிற் பகுதியில் மறுபடியும் கட்ட ஆரம்பிப்பீர் கள். முருகப்பெருமானை வணங்குங்கள். பொதுவாக நல்ல மாதமாக இது இருக்கும்.

**சாதகமான நாள்கள்:**2, 5, 12, 14, 18, 20, 21, 23, 26, 28

**சந்திராஷ்டம நாள்கள்:** 9 காலை முதல் 10, 11 மாலை வரை



விருச்சிகம்

**(விசாகம் 4-ம் பாதம், அனுஷம், கேட்டை)**

இந்த மாதத்தில் உற்றார் உறவினரால் மிகவும் கௌரவமாக நடத்தப்படுவீர்கள். மாதப் பிற்பகுதியில் தங்கள் சகோதரரின் உதவியுடன் துணிச்சலான சில செயல்களைச் செய்து முடிப்பீர்கள். அரசு மற்றும் தந்தையிடமிருந்து தாங்கள் எதிர்பார்த்த அனுகூலம் கிடைக்கும். உறவினர் வீட்டு விசேஷங்களுக்கு சென்று சகோதர சகோதரிகளுடன் பேசி மகிழ்வீர்கள். கணவன் மனைவிக்கிடையே அந்நியோன்யம் அதிகரிக்கும். சிலர் வாழ்க்கைத்துணையின் உதவியினாலும் தைரியத்தினாலும் சில அத்தியாவசியமான செயல்களைச் செய்து முடிப்பீர்கள். குழந்தைகளின் பிரச்னைகளைக் கண்டறிந்து நிவர்த்தி செய்யும் காலம் இது. பட்டு வியாபாரத்தில் உள்ள நெசவாளர்களுக்கும் வியாபாரிகளுக்கும் அதிக லாபம் கிடைக்கும். தொழில் செய்பவர்களுக்கு அரசாங்க உதவிகள் கிடைக்கும். துர்கையை வழிபட நன்மை உண்டாகும்.

**சாதகமான நாள்கள்:**2, 5, 8, 15, 17, 20, 21, 23, 26, 28

**சந்திராஷ்டம நாள்கள்:** 11 மாலை முதல் 12, 13



தனுசு

**(மூலம், பூராடம், உத்திராடம் 1-ம் பாதம்)**

மிகவும் தைரியத்துடனும் உற்சாகத்துடனும் செயல்படும் மாதமிது. தாங்கள் எடுக்கும் அனைத்து முயற்சிகளும் வெற்றிகரமாக முடியும். தங்கள் தந்தையின் ஆலோசனையினால் குடும்பத்தில் சில நல்ல விஷயங்கள் நடந்தேறும். தந்தையின் வழியில் அனுகூலம் கிடைக்கும். தாயின் மறைமுக உதவி கிடைக்கும். சிலருக்கு வெளிநாடு செல்லும் யோகம் ஏற்படும். மாணவர்களின் படிப்பு சிறந்து விளங்கும். உடல்நலனில் சற்று கவனம் தேவை. வியாபாரம் சிறந்து விளங்கும். வியாபாரத்தை விரிவு செய்ய வேண்டும் என்று நினைப்பவர்கள் தற்போது செய்யலாம். வீடு வாங்குவது சம்பந்தமான கடன் சிலருக்கு ஏற்படும். வங்கியிடமிருந்து அல்லது தனி நபரிடமிருந்து கேட்ட கடன் கிடைக்கும். பிரதோஷம் அன்று சிவபெருமான் வழிபாடு நன்று.

**சாதகமான நாள்கள்:** 1, 3, 5, 7, 11, 17, 21, 24, 27

**சந்திராஷ்டம நாள்கள்:** 14, 15, 16 மாலை வரை





மகரம்

**(உத்திராடம் 2,3,4-ம் பாதம், திருவோணம், அவிட்டம் 1,2-ம் பாதம்)**

மாதப் பிற்பகுதியில் தேக ஆரோக்கியம் சிறந்து விளங்கும். பெண் குழந்தைகளால் சிறப்பு உண்டாகும். குலதெய்வக் கோயிலுக்குச் சென்று வருவீர்கள். தந்தையுடன் மனக்கசப்பு ஏற்பட்டு பிறகு நீங்கும். மாதப் பிற்பகுதியில் தாயின் தேக ஆரோக்கியம் சிறந்து காணப்படும். மாணவர்கள் படிப்பிலும் அறிவிலும் சிறந்து விளங்குவார்கள். எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள் வந்து சேரும். சிலருக்கு வேலை சம்பந்தமாக வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். நெடுநாள்களாக எதிர்பார்த்திருந்த வங்கிக்கடன் இப்பொழுது கிடைக்கும். குரு பகவானின் உதவியினால் தனவரவு அதிகமுண்டு. இளைஞர்களுக்கும், பெண்களுக்கும் முன்னேற்றமான மாதமாக இருக்கும். வியாபாரிகள் அதிக லாபம் அடைவார்கள். வியாபாரம் சிறந்து விளங்கும். குலதெய்வம் மற்றும் சூரிய பகவானை வழிபட அனைத்து தடைகளும் நீங்கி வாழ்வு வளம் பெறும்.

**சாதகமான நாள்கள்:** 1, 5, 7, 10, 13, 20, 22, 23, 25

**சந்திராஷ்டம நாள்கள்:** 16 மாலை முதல் 17, 18, 19 காலை வரை



கும்பம்

**(அவிட்டம் 3,4-ம் பாதம், சதயம், பூரட்டாதி 1,2,3-ம் பாதம்)**

தங்கள் ராசியிலேயே குரு பகவான் இருப்பதால் தங்களுடைய உடல் நலம் சிறந்து காணப்படும். வேலை சம்பந்தமாக வெளிநாடு செல்ல வேண்டும் என்று நினைத்தவர்களுக்கு மாதப் பிற்பகுதியில் அதற்கான வாய்ப்பு ஏற்படும். பெற்றோரினால் ஆதாயம் உண்டு. நண்பர்களிடமிருந்து தாங்கள் கேட்ட உதவிகள் கிடைக்கும். சிலருக்கு புது வீடு வாங்கும் யோகம் ஏற்படும். வியாபாரத்திலும் தொழிலிலும் மறைமுக எதிரிகளால் தொந்தரவு உண்டு. புதிதாக தங்க நகை வாங்கும் சூழ்நிலை ஏற்படும். கலைஞர் களுக்கு மாத முற்பகுதியில் புதிய ஒப்பந்தங்கள் கையெழுத்தாகும். தொழில் சம்பந்தமாக வெளியூர் சென்று வரும் சூழ்நிலையும் ஏற்படும். மாணவர்கள் பாடங்களை சற்று கவனமுடன் படிப்பது அவசியம். மகாவிஷ்ணுவை துளசி கொண்டு வழிபடவும்.

**சாதகமான நாள்கள்:**2, 4, 7, 10, 13, 22, 23, 25, 27

**சந்திராஷ்டம நாள்கள்:** 19 காலை முதல் 20, 21 பிற்பகல் வரை



மீனம்

**(பூரட்டாதி 4 - ம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி)**

குடும்பம் மிகவும் மகிழ்ச்சியுடன் காணப்படும். உடன் பிறப்புகள் மிகவும் ஒற்றுமையுடன் இருப்பார்கள். சகோதரியின் குடும்பத்தில் ஏற்படும் சுபநிகழ்ச்சிகளுக்கு குடும்பத்தினருடன் சென்று வருவீர்கள். மாதப் பிற்பகுதியில் வீடு வாங்குவது சம்பந்தமான பத்திரப்பதிவு ஒன்று நடக்கும். தந்தை வழியில் சில செலவுகள் ஏற்பட வாய்ப்புண்டு. பெண் குழந்தைகளால் மிகுந்த மகிழ்ச்சி உண்டு. மாணவ மாணவியர்கள் நன்கு படிப்பார்கள். பணவரவுக்குக் குறைவிருக்காது. நண்பர்களினால் ஆதாயமும் சந்தோஷமும் உண்டு. சிலருக்கு திடீரென ஊதிய உயர்வுடன் கூடிய இடமாற்றம் ஏற்படும். வியாபாரத்தை விரிவுபடுத்தும் எண்ணம் உள்ளவர்கள் இப்போது தாராளமாக விரிவுபடுத்தலாம். உடல் நலனில் சற்று கவனம் தேவை. தாயாரினால் ஆதாயம் உண்டு. பராசக்தியை வழிபடவும்.

**சாதகமான நாள்கள்:** 3, 5, 6, 8, 11, 14, 16, 17, 26, 28

**சந்திராஷ்டம நாள்கள்:** 21 பிற்பகல் முதல் 22, 23 பிற்பகல் வரை




# கருத்து கருவூலமாக...

**ஆ**தி காலத்தில் ஞாயிறு வழிபாடுதான் எங்கும் நிலை பெற்றிருந்தது என்பதை மிகத் தெளிவாக விளக்கியிருந்தது 'ஞாயிறு போற்றுதும்' கட்டுரை. ஓம் சக்தியில் இடம்பெற்றுள்ள அனைத்துப் பகுதிகளுமே கருத்து கருவூலப் பெட்டகமாக அமைந்துள்ளது!

**– தங்கவேல் பழனிச்சாமி, பெரிய கள்ளிவலசு.**

**இ**ந்தியாவின் பெருமையை உலகறியச் செய்த சுவாமி விவேகானந்தர் குறித்து அறியப்படாத பல அரிய தகவல்களை வழங்கி நெஞ்சை நெகிழ வைத்துவிட்டீர்கள்!

**– கே. பிரபாவதி, கன்னியாகுமரி.**

**சூ**ரிய மின் தகடுகளின் மறுவாழ்வு குறித்த கட்டுரை நம்மைச் சிந்திக்க வைத்தது. வருங்காலங்களில் அதன் கழிவுகளைக் கையாள்வதில் பொறுப்பானவர்கள் கவனம் செலுத்த வேண்டும்.

**– தி. தண்டபாணி, சேலம்.**

**நீ**ர்மேலாண்மையை முறையாகச் செய்தாலே இந்தியாவில் விவசாயம் செழித்து பலமடங்கு உயரும் என்ற அருட்செல்வரின் உரத்த சிந்தனை அருமை.

**– வே. வள்ளியம்மை, மானாமதுரை.**

**வீ**ரத்தைப் போற்றும் தேசத்தில் கோழைகள் பிறப்பதில்லை என்பதை நினைவுபடுத்தியது மாவீரர் கரம் சிங் பற்றிய கட்டுரை. பள்ளி, கல்லூரி மாணவர்கள் படித்துப் பயன்பெற வேண்டும்.

**– ப. சரவணன், தூத்துக்குடி.**

**'மா**ர்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில்' கட்டுரை, மடைதிறந்த வெள்ளம்போல் தன் வைர வார்த்தைகளால் ஜொலிக்க வைத்திருக்கிறார் கட்டுரையாளர். வாழ்த்துகள்!

**– வி. சரண்யா விக்னேஷ், கோவை.**

**கே**ரளாவிலுள்ள சபரிமலைக்குச் செல்ல முடியவில்லையே என வருந்தும் பெண் பக்தர்களுக்கு, பெண்களின் சபரிமலையான சக்குளத்துக்காவு பகவதி அம்மன் கோயில் நிச்சயம் மனநிறைவு தரும்.

**– பி. ஜனன்யாஸ்ரீ, கும்பகோணம்.**

**எ**ரியும் மெழுகாக உருகி உழவனின் வறுமையைக் கவிதையாக செதுக்கியிருக்கிறார், பொன்னாண்டான்.

**– க. பரமேஸ்வரி, திருச்சி.**





**ஆருயிர்களுக்கு எல்லாம் – நான் அன்பு செயல் வேண்டும்.**

– வள்ளலார்

**மலர்:40** | **பிப்ரவரி 2022** | **இதழ்:1**

நிறுவனர்: **நா.மகாலிங்கம்**
ஆசிரியர் - வெளியிடுபவர்: **ம.மாணிக்கம்**
Editor & Publisher : **M.MANICKAM**

அச்சிடுபவர்: **த.ராஜ்குமார்**
Printer : **T.RAJKUMAR, Rukmani Offset Press**
ருக்மணி ஆப்செட் பிரஸ், 32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், கோவை - 641 021.

பொறுப்பாசிரியர்: **எஸ்.கண்ணன்கோபாலன்**

நிருபர்: **இரா.பொன்னாண்டான்**
தலைமை வடிவமைப்பு: **கே.எம்.பிரசன்னா**
வடிவமைப்பு: **எஸ்.காமராஜ்**
அலுவலக நிர்வாகம்: **ஆர்.குமாரசாமி**





முகவரி: **ஆசிரியர், ஓம் சக்தி, சக்தி சுகர்ஸ் லிமிடெட், 180, ரேஸ்கோர்ஸ் ரோடு, கோயம்புத்தூர் – 641 018,**
போன்; 0422 4322471, 0422 4322222
வெளியிட்டோர்; **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

**E-mail : omsakthimagazine@gmail.com**

கல்கி கிருஷ்ணமூர்த்தி | ஓவியம்: பிரபா



பத்து நாளைக்கு முன் நரசிம்மலு நாயக்கர் வந்திருந்தார். கோனார் பெட்டியிலிருந்து அவருடைய பிராமிஸரி நோட்டை எடுத்து வரும்படி சொல்லவே, பிடாரி கொண்டு போய்க் கொடுத்தாள். நாயக்கர் அதை வாங்கிக் கொண்டு ரூ.150 நோட்டுகளாக எண்ணி வைத்தார். கோனார் அதை வாங்கி ஒரு கடுதாசியில் சுற்றித் தலையணைக்குள் செருகி வைத்துக் கொண்டார். கொஞ்ச நேரம் கழித்துப் பிடாரி அவரிடம் வந்து, "பணத்தைப் பெட்டியில் வைக்கட்டுமா?" என்று கேட்டபோது "சீ! போ! உன் காரியத்தைப் பார்!" என்று எரிந்து விழுந்தார்.

அன்றிரவு பிடாரி சமையலறைக் கதவைத் திறந்து வைத்துக்கொண்டு படுத்தாள். தூங்குவது போல் பாசாங்கு செய்தாலேயொழிய கண் கொட்டவேயில்லை. இரவு நடு

ஜாமத்தில் கோனார் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து சுற்றுமுற்றும் பார்த்தார். எல்லாரும் தூங்குகிறார்களா என்று பார்த்து விட்டுத் தலையணைக்குள்ளிருந்து ரூபாய் நோட்டுகளை எடுத்துக்கொண்டார். பிறகு மெல்ல மெல்ல நகர்ந்து சென்று களஞ்சியத்தை அடைந்தார். அந்தக் கல்லுகளைப் பெயர்த்தெடுத்த பின்னர் உள்ளே கையை விட்டு ஒரு சின்னஞ்சிறு தகரப் பெட்டியை எடுத்தார். அதற்குள் நோட்டுகளை வைத்த பிறகு மறுபடியும் முன்போல் அதைத் துவாரத்துக்குள் வைத்து மூடிவிட்டுத் திரும்பப் படுக்கைக்கு வந்து படுத்துக் கொண்டார்.

இவ்வாறு கோனார் ரொக்கம் வைத்திருந்த இடத்தைப் பிடாரி கண்டுகொண்டாள். கோனார் இருக்கும் வரை அதை எடுப்பதற்கு வழியில்லை. சீக்காளி மனிதன்; களஞ்சியத்துக்கு எதிரிலேயே படுத்திருந்தார். நன்றாய்த் தூங்குவதும் கிடையாது. ஆனாலும் பணம் எங்கே போய் விடப் போகிறதென்று பிடாரி தைரியமாயிருந்தாள். அவர் இறந்த பிறகு பிடாரி வீட்டை விட்டு நகரவில்லையாதலால் யாரும் எடுத்திருக்க முடியாது. பின் எப்படி அந்தப் பெட்டி மாயமாய்ப் போயிருக்கும்?

வீட்டிலுள்ள சந்துபொந்து எல்லாவற்றையும் பிடாரி சோதனை செய்து பார்த்தாள். ஒன்றும் பயன்படவில்லை. போனது போனதுதான்.

சட்டென்று பூங்கொடியின் மேல் அவளது சந்தேகம் வந்து நின்றது. அவள்தான் எடுத்திருக்க வேண்டும். திருடி; சாகஸக்காரி. அவளை ஒரு கை பார்க்கிறேன்' என்று பிடாரி மனதுக்குள் எண்ணினாள்.

மறுநாள் பூங்கொடியைக் கூப்பிட்டு, "இதோ பார்! நிஜத்தைச் சொன்னாயானால் பேசாமல் விட்டு விடுகிறேன். நீ ஏதாவது பணம் எடுத்தாயா?" என்று கேட்டாள். பூங்கொடி அதற்கு, "நான் ஒருத்தர் பணத்தையும் எடுக்கவில்லை. பிறத்தியார் பணம் எனக்கு எதற்கு?" என்றாள். எவ்வளவோ நயத்திலும் பயத்திலும் கேட்டும் வேறு பதில் அவளிடமிருந்து வரவில்லை.

கோனாருக்குப் பதினாறாம் நாள் சடங்கு முடிந்தது. அதற்கு மறுதினம் பிடாரி பூங்கொடியைக் கூப்பிட்டு, "அடியே, இங்கே பார்! நீதான் பணத்தை எடுத்திருக்க வேண்டும். வேறு யாரும் திருடன் வந்துவிடவில்லை. பணத்தைக் கொடுத்தாயோ இந்த வீட்டில் இருக்கலாம். இல்லாவிட்டால் வீட்டை விட்டு வெளியேறிவிடு!" என்றாள்.

"அப்படியே ஆகட்டும். நீ இப்படிச் சொல்ல வேண்டுமென்றுதான் காத்துக் கொண்டிருந்தேன். என் மாமன் இருந்த வீட்டில் அவர் இல்லாமல் இருக்கச் சகிக்கவில்லை. இப்பொழுதே போய்விடுகி றேன்" என்றாள் பூங்கொடி.

அன்று காட்டில் பூங்கொடியைச் சந்தித்துப் பேசியதிலிருந்து கிருஷ்ணக் கோனாருடைய மனம் ரொம்பக் குழம்பியிருந்தது. காரியமெல்லாம் தாறுமாறாகச் செய்து வந்தான். பிண்ணாக்கைக் கொண்டு போய்த் தொட்டியில் போடுவதற்குப் பதிலாகக் கிணற்றில் போட்டான். எருமைக் கன்றுக் குட்டியை பசுமாட்டில் ஊட்டவிட்டான். கறவை மாட்டுக்கு வைக்க வேண்டிய பருத்திக் கொட்டையைக் கிடாமாட்டுக்கு வைத்தான்.

இனியவை 40

"சொன்ன வேலைகளை மாற்றமில்லாமல் செய்யும் வேலைக் காரர்களைக் கொண்டிருப்பது இனிதாகும். குற்றங் களில் ஈடுபடாமல் கற்றல் மிக இனி தாகும். ஏரினையும் உழவுமாடுகளையும் சொந்தமாக வைத் திருப்பவன் விவசாயம் செய்வது இனிது."

தனக்குத்தானே பேசிக்கொள்ளவும் தொடங்கினான்.

"நாம் இரண்டு பேரும் கிளியாய் பறந்து போய்விடுவோமா?" என்று இரைந்து சொல்லிவிட்டுக் கலகலவென்று சிரிப்பான். "எனக்கு மட்டும் துரோகம் செய்தாயோ?" என்று கூறிப் பல்லை நறநறவென்று கடிப்பான். அன்று ராஜன் வாய்க்கால் கரையில் பூங்கொடியைப் பிரிந்த சமயத்தில் ஒரு கையினால் அவளுடைய மோவாய்க்கட்டையை நிமிர்த்திப் பிடித்துக்கொண்டு தன்னுடைய முகத்தை அருகில் கொண்டு போனதும், அவள், "சீச்சீ! நாம் இன்னும் சின்னப் பிள்ளைகளா?" என்று உதறிக் கொண்டு ஓடிப் போனதும் எப்போதும் அவன் மனக்கண்முன் நின்றது. சில சமயம் அவளுடைய உருவம் அதே நிலையில் எதிரில் நிற்பதுபோல் தோன்றும். அப்போது அவனுடைய கைகளும் முகமும் கோரணிகள் செய்யும் "தெரியுமா? என்னை மறக்கக்கூடாது!" என்பான்.

இவற்றையெல்லாம் கவனித்த அவனுடைய தாயார் "ஐயோ! என் மகனுக்கு மோகினி பிடித்து விட்டதே!" என்று தவித்தாள். அவளுடைய உறவுமுறையாருக்குள் கலியாணத்துக்குத் தகுதியாயிருந்த பெண்களைப்பற்றியெல்லாம் விசாரிக்கத் தொடங்கினாள்.

இலையிலே சோற்றை வைத்துக் கொண்டு சாப்பிடாமல் மகன் என்னவோ யோசனை செய்து கொண்டிருப்பதைக் காணும்போது, "அடே அப்பா! உனக்கென்னடா இப்படி வந்தது?" என்பாள். கிருஷ்ணன், "சீ! போ! உன்னை யார் கேட்டது?" என்று வள்ளென்று விழுவான். "ஐயோ! என் மகன் இப்படி ஒருநாளும் இருந்ததில்லையே, மாரியாத்தா என் மகனைக் காப்பாற்றடி! உனக்குப் படையல் வைக்கிறேன்," என்று வேண்டிக்கொள்வாள்.

பெருமாள் கோனார் செத்துப் போனதிலிருந்து கிருஷ்ணனுடைய மனக்குழப்பம் இன்னும் அதிகமாயிற்று. பூங்கொடி தாய் தந்தையற்ற அநாதையென்பதும் அவளுக்கு மாமன் வீட்டைத் தவிர வேறு போக்கிடம் கிடையாதென்பதும் ஊரில் எல்லாருக்கும் தெரியும். பெருமாள் கோனார் உயிரோடிருக்கும் வரை அபிமானமாய் வைத்துக் கொண்டிருந்தார். இனிமேல் அவளை யார் கவனிப்பார்கள்? பிடாரி அவளை வதைத்து விடுவாளே?

ஒருநாள் கிருஷ்ணன் தாயாரிடம் "ஏன் ஆயா, பெருமாள் கோனார் செத்துப் போனாரே? இனிமேல் அந்தப் பெண் என்ன செய்யும்?" என்று கேட்டான்.

"எந்தப் பெண்ணடா?"

"அதுதானம்மா, பூங்கொடி!"

"அவளை அந்தப் பிடாரி துரத்தி விடுவாள் சீக்கிரம். இப்போதே திருட்டுப்பட்டம் கட்டி விட்டாளே, தெரியாதா உனக்கு?"

"அது என்ன, அம்மா?" என்று கிருஷ்ணன் பரபரப்புடன் கேட்டான்.

"கோனார் ரொக்கப் பணம் வைத்திருந்தாராம். அதைக் காணுமாம். பிடாரி அந்த அநாதைப் பெண் மேலே பழியைப் போடுகிறாள். அவள்தான் எடுத்து விட்டாள் என்கிறாள். அந்தப் பெண் அப்படிச் செய்திருக்கவே செய்திருக்காது. ஏதாவது பழி சுமத்தித்தானே வீட்டை விட்டுத் துரத்த வேண்டும்?"

கிருஷ்ணனுடைய நெஞ்சில் முள் தைத்தது போல் சுருக்கென்றது. அன்றைய தினம் காட்டிற்கு அவள் தனியாக வந்திருந்ததும், தன்னைக் கண்டு திகைத்து நின்றதும், எதற்காக வந்தாய் என்று கேட்டதற்குப் பதில் சொல்லாமல் மூடு மந்திரம் செய்ததும் ஞாபகத்திற்கு வந்தன. உண்மையில் அந்தப் பெண் திருடிதானோ? இந்த எண்ணம் அவனுடைய நெஞ்சில் அளவிலாத வேதனையை உண்டாக்கிற்று.

எவ்வளவுதான் யோசித்தாலும், அவன் ஒரு முடிவுக்கே வர வேண்டியிருந்தது. பிடாரி சொல்வது நிஜந்தான். பூங்கொடிதான் பணத்தை எடுத்திருக்க வேண்டும். அதை எங்கேயோ ஒளிப்பதற்குத்தான் அன்று காட்டிற்கு வந்திருக்கிறாள். இந்தச் சந்தேகம் தோன்றவே, அன்றைய தினத்திலிருந்து கிருஷ்ணன் மாடுகளை ஓட்டிக் கொண்டு காட்டிற்குப் போனபோதெல்லாம் சுற்றுமுற்றும் பார்த்த வண்ணம் இருந்தான். பூங்கொடி பணம் ஒளித்து வைத்திருக்குமிடம் தன் கண்ணில் ஒரு வேளை பட்டுவிடுமோ என்று அவனுடைய நெஞ்சில் திக்குத்திக்கென்று அடித்துக் கொண்டேயிருந்தது.

பெருமாள் கோனாரின் கருமாதிக்கு மறுநாள் காலை கிருஷ்ணன் பழையசோறு சாப்பிட்டுக்கொண்டிருந்தான். அப்போது

அடுத்த வீட்டுக்காரி, "அமிர்தம்! சங்கதி கேட்டாயா?" என்று சொல்லிக் கொண்டு வந்தாள்.

"என்ன சமாசாரம்?" என்று அமிர்தம் கேட்டாள்.

"பிடாரி, பூங்கொடியை வீட்டை விட்டுப் போகச் சொல்லிவிட்டாள். அந்தப் பெண் அழுது கொண்டே கிளம்பிப் போகிறது."

"ஐயோ பாவம்! அது எங்கே போகும்?" என்றாள் அமிர்தம்.

"அது என்ன கர்மமோ? போக்கிடம் ஏது அதற்கு? எங்கேயாவது ஆத்திலே குளத்திலே விழுந்து செத்து வைத்தாலும் வைக்கும்..."

கிருஷ்ணன் அதற்குமேல் கேட்கவில்லை. சட்டென்று எழுந்திருந்து கையலம்பிவிட்டு வேலை செய்து பிழைக்கலாமென்று"

"ஏன், இத்தனை நாள் இருந்த ஊரை விட்டுப் போகவேணும்?"

"போகாதே பின்னே எங்கேயிருக்கிறது? மாமி வீட்டை விட்டுப் போகச் சொல்லிவிட்டாள்."

"ஏன் அப்படிச் சொன்னாள்? அவளுக்கு உன் மேலே என்ன கோபம்?"

பூங்கொடி சற்று நேரம் சும்மா இருந்தாள். பிறகு, "உனக்கென்ன அதைப்பற்றி? எனக்கும் அந்த வீட்டிலே இருக்கப் பிடிக்கலை; நான் போகிறேன்," என்றாள்.

"நான் சொல்கிறேன் கேள் பூங்கொடி! அந்த நாயின் பணம் உனக்கு வேண்டாம். ஒருத்தருக்கும் தெரியாமல் எடுத்துக் கொண்டு வந்து அந்த வீட்டிலேயே எறிந்துவிடு...நாம்..."



வாசலில் வந்து பார்த்தான். பூங்கொடி தெருவைத் தாண்டி அப்பாலுள்ள பாதையில் போவதைக் கண்டான். இவன் குறுக்கு வழியாக வயல்களில் விழுந்து சென்று அந்தப் பாதையில் அவளுக்கு முன்னால் சென்று ஏறினான். பூங்கொடியின் எதிரில் சென்று வழிமறித்து நின்று கொண்டு, "எங்கே போறே?" என்று கேட்டான்.

"நான் எங்கே போனால் யாருக்கென்ன?" என்று பூங்கொடி சொல்லிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

"சொல்லாது போனால் நான் விடமாட்டேன்," என்றான் கிருஷ்ணன்.

"சீர்காழிக்குப் போறேன்; அங்கே மில்லிலே

"நீ கூட என்னைத் திருடி என்றுதானே நினைக்கிறாய்? நான் எதற்காக உயிரோடு இருக்கவேணும்? விடு நான் போகிறேன்" என்று சொல்லிப் பூங்கொடி அழத் தொடங்கினாள்.

கிருஷ்ணன் சிறிது நேரம் சும்மா இருந்தான். பிறகு, "சரி, வா! போகலாம்!" என்றான்.

"எங்கே?"

"வீட்டுக்கு."

"எந்த வீட்டுக்கு?"

"எந்த வீட்டுக்கா? என் வீட்டுக்குத்தான். சீர்காழிக்கு நீ போகவும் வேண்டாம்; மில்லில் வேலை செய்யவும் வேண்டாம். நானிருக்கிற

வரையில் அது நடக்காது."

"உன் வீட்டுக்கு வந்தால்...அப்புறம்?"

"புரோகிதரைக் கூப்பிட்டுக் கல்யாணத்துக்கு நாள் வைக்கச் சொல்றது!"

"திருடியைக் கட்டிக் கொண்டாய் என்று ஊரிலே சொல்ல மாட்டார்களா? உனக்கு வெட்கமாயிராதா?"

"யாராவது உன்னை அப்படிச் சொன்னால் அவர்கள் நாக்கை அறுத்துவிடுவேன். அவர் களுக்கு என்ன கொம்பா முளைத்திருக்கிறது."

"உன் ஆயா சம்மதிப்பாளா? அங்கே போய் மறுபடியும் வீட்டை விட்டுப் போகச் சொன்னால்?"

"ஆயா அப்படிச் சொன்னால் உன்னோடு நானும் வீட்டை விட்டுக் கிளம்பி வந்துவிடுகிறேன். அப்பொழுது இரண்டு பேருமாய்ப் போவோம்."

"சத்தியமாய்ச் சொன்னால்தான் வருவேன்."

"சத்தியமாய்ச் சொல்றேன். வா, போகலாம்!"

சுபதின, சுபலக்னத்தில் கிருஷ்ணக் கோனானுக்கும் பூங்கொடிக்கும் விவாக மகோற்சவம் நடந்தேறியது. ஸ்ரீமதி பிடாரி அம்மாளைத் தவிர மற்றபடி ஊராரெல்லாம் விஜயம் செய்து தம்பதிகளை ஆசீர்வதித்தார்கள். இவ்வளவு நல்ல பெண்ணின் பேரில் திருட்டுப் பழியைச் சுமத்தி வீட்டை விட்டுத் துரத்திய பிடாரியைத் தூற்றாதவர்கள் இல்லை. அவ்வாறே கிருஷ்ணனைப் புகழ்ந்து போற்றாதவர்களும் அந்த ஊரில் கிடையாது. எல்லாரிலும் அதிக குதூகலத்துடன் விளங்கியவள் கிருஷ்ணனுடைய தாயார் அமிர்தம்தான். தனக்குப் பேச்சுத் துணைக்கும், ஏவின வேலை செய்வதற்கும் மருமகள் ஆச்சு பிள்ளைக்கும் புத்தி தெளிந்து முன்னைப் போல் நன்றாயிருப்பான்.

கலியாணச் சந்தடி அடங்கிய அடியோடு ஒரு நாள் காலையில் பூங்கொடி கிருஷ்ணனிடம் "காட்டுக்குப் போய் விட்டு வரலாம், வா!" என்று சொன்னாள்.

"இப்போது எதற்குக் காட்டுக்கு?"

"ஒரு காரியம் இருக்கிறது. 'நீ ஒன்றும் என்னைக் கேட்காதே நானாகச் சொல்கிறேன்' என்று அப்போது சொல்லவில்லையா? அந்தச் சமாசாரத்தை இன்று தெரிவிக்கிறேன், வா!"

கிருஷ்ணனுக்கு விஷயம் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஆவலாயிருந்தது; ஆனால், காரியம் என்னவோ சுத்தமாய்ப் பிடிக்கவில்லை. வேண்டா வெறுப்பாய் வருவதாக ஒத்துக் கொண்டான்.

பூங்கொடி ராஜன் வாய்க்காலில் குளிக்கச் செல்வது போல் முதலில் போனாள். கிருஷ்ணன் பின்னோடு மாடுகளை ஓட்டிக் கொண்டு சென்றான்.

அக்கரைச் சேர்ந்ததும், பூங்கொடி துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடத் தொடங்கினாள். மெதுவாகத் தயக்கத்துடன் நடந்த கிருஷ்ணனைச் சில சமயம் கையைப் பிடித்து இழுத்துச் சென்றாள். கிருஷ்ணனுடைய நெஞ்சு மேலும் மேலும் படபடவென்று அடித்துக் கொண்டது. கடைசியாக ஓர் ஆலமரத் தடியில் போய்ச் சேர்ந்ததும், பூங்கொடி கிருஷ்ணன் கையை விட்டுவிட்டு அந்த மரத்தின் மேல் தாவி ஏறினாள். இரண்டு கிளைகளுக்கு மத்தியில் புல்லுருவிகளால் மூடப்பட்டிருந்த ஒரு பொந்தினுள் கையை விட்டு, அதற்குள்ளிருந்து ஒரு சிறு தகரப்பெட்டியை எடுத்தாள். "இந்தா!" என்று கிருஷ்ணனிடம் நீட்டினாள்.

"என்ன அது?"

"வாங்கிப் பாரேன்"

கிருஷ்ணன் பெட்டியை வாங்கித் திறந்து பார்த்தான். உள்ளே ரூபாய் நோட்டுகளும் பவுன்களும் இருந்தன.

'கடைசியில், இவள் திருடிதானா?' என்று கிருஷ்ணன் எண்ணினான். அந்த நினைப்பை அவனால் சகிக்கவே முடியவில்லை. அதிலும் 'பிடாரி சொன்னதும் நிஜம். அவள் இவளை வீட்டைவிட்டுத் துரத்தியதும் நியாயம்' என்று எண்ணியபோது அவனுடைய தலையை யாரோ பிளப்பது போல் இருந்தது.

"இதை எதற்காக என்னிடம் கொடுத்தாய்?" என்று கிருஷ்ணன் கோபமாய்க் கேட்டான்.

"சொத்தைச் சொத்துக்குரியவர்களிடம் கொடுத்து விடவேண்டுமென்று நீ அப்போதே சொல்லவில்லையா?"

"ஆமாம்; என்னைக் கொண்டு போய்ப் பிடாரியிடம் கொடுக்கச் சொல்கிறாயா?"

"நீ என்ன வேண்டுமானாலும் செய்; யாரிடம் வேண்டுமானாலும் கொடு. உன்னுடைய



சொத்தை உன்னிடம் நான் சேர்ப்பித்து விட்டேன்," என்றாள்.

கிருஷ்ணனுக்கு ஒன்றும் புரியவில்லை. என்னவோ புதிர் போடுவது போலிருந்தது. "என்ன உளறுகிறாய்?" என்று கேட்டான்.

"நான் ஒன்றும் உளறவில்லை. அதற்குள் ஒரு கடுதாசி இருக்கிறது; எடுத்து வாசித்துப் பார்!" என்றாள் பூங்கொடி.

கிருஷ்ணன் ஆவலோடு கடுதாசை எடுத்து வாசித்தான். அதில் பின் வருமாறு எழுதியிருந்தது;

'முத்துக் கோனான் மகன் பெருமாள் கோனான் சுயப் பிரக்ஞையுடன் மனப்பூர்வமாய் எழுதி வைப்பது என்னவென்றால் இந்தப் பெட்டியில் நானூற்றிருபது ரூபாய் பணமும், பன்னிரண்டு முழுப்பவுனும் இருக்கின்றன. இந்தப் பணம், பவுன் எல்லாம் என்னுடைய சுயார்ஜிதம். இந்தத் தொகை முழுவதையும் என்னுடைய கண்ணான மருமகள் பூங்கொடிக்குக் கலியாணப் பரிசத்துக்காக எழுதி வைக்கிறேன். அவளைக் கலியாணம் பண்ணிக் கொள்கிறவன் இது எல்லாவற்றையும் அடைய வேண்டியது. பணத்தை வீண் செலவு செய்யாமல் நிலம் வாங்குவதற்காவது வீடு கட்டிக் கொள்ளவாவது உபயோகிக்க வேண்டியது.

இந்த விஷயம் வெளியில் தெரிந்தால், பூங்கொடியை என்னுடைய பெண்சாதி கஷ்டப்படுத்தி ஒருவேளை உயிருக்கே அபாயம் செய்வாளென்று பயந்தும், இன்னும் பணத்துக்கு ஆசைப்பட்டு யாராவது உபயோகமற்றவன் அவளைக் கலியாணம் செய்து கொள்ள முயற்சிக்கலாமென்று நினைத்தும் பூங்கொடிக்குக் கலியாணம் ஆகும்வரை இந்த விஷயத்தை வெளிப்படுத்தாமல் ரகசியமாய் வைத்திருக்கவேணுமென்று சத்தியம் வாங்கியிருக்கிறேன். பெட்டியை எங்காவது பத்திரமாய் ஒளித்து வைத்திருக்கும்படி பூங்கொடியிடம் ஒப்புவித்திருக்கிறேன்.

இந்தச் சொத்தை அடைகிறவன் என்னுடைய மருமகளுக்கு ஒருவித மனக்குறையுமின்றி எப்போதும் சந்தோஷமாய் வைத்திருக்க வேண்டும்.'

மேற்படி கடிதத்தைப் படித்துவிட்டுச் சற்றுநேரம் யோசித்ததில், கிருஷ்ணனுக்கு எல்லாம் விளங்கி விட்டது. மாசி மகத்தன்று வீட்டில் ஒருவரும் இல்லாத சமயத்தில் பெருமாள் கோனார் பூங்கொடியிடம் அந்தப் பெட்டியைக் கொடுத்துப் பத்திரப்படுத்தும்படி சொல்லியிருக்க வேண்டும். மயிலைக் காளை கெட்டுப் போன அன்று, தான் காட்டில் அவளைச் சந்தித்தன் ரகசியம் அதுதான்.

பூங்கொடியும், அவளுடைய சீதனமும் தனக்குக் கிடைத்த அதிர்ஷ்டத்துக்கெல்லாம் மூலகாரணம் மயிலைக் காளைதான் என்பது கிருஷ்ணனுடைய நம்பிக்கை. யாராரோ வந்து நல்ல விலைக்கு அதை வாங்கிக் கொள்வதாகச் சொன்னார்கள். கிருஷ்ணன் அதை விற்க மறுத்து விட்டான்.

ஒரு சின்ன வண்டி வாங்கி அதில் மயிலைக் காளையைப் பூட்டி ஓட்டிப் பழக்கினான். தன்னையும் பூங்கொடியையும் தவிர அந்த வண்டியில் வேறு யாரும் உட்காருவதற்கு அவன் அனுமதிப்பதில்லை. ●



# தப்பினால் லாபம்

மீன்பிடி தொழிலுக்குப் பயன்படும் பொருள்களை விற்பனை செய்யும் ஒரு கடையின் வாசலில், ‘மீன் வாலைகள் விற்கப்படும்’ என்று தப்பும் தவறுமாக எழுதியிருந்தது.

இதை தினமும் பார்த்து ஆத்திரம் அடைந்த ஒரு வாலிபன், கடைக்குள் நுழைந்து கடைக்காரரிடம், "இந்தத் தப்பை உன் கவனத்துக்குக் கொண்டு வர ஓர் ஆள்கூட இங்கே நுழைந்ததில்லையா?" என்று கேட்டான்.

கடைக்காரர் சொன்னார்: "ஏன் இல்லை, அதைப் பார்த்துவிட்டுத் திருத்தும்படி அறிவுறுத்த உள்ளே வருபவர்கள்தான் அதிகம். அப்படி உள்ளே வந்தவர்கள் ஏதாவது ஒன்றை வாங்காமல் சென்றதில்லை. அதனால் தான் என் வியாபாரமே நடந்துகொண்டிருக்கிறது அப்பனே!"

ஒரு முறை முல்லா நஸ்ருதீனிடம் நண்பர் ஒருவர் இனிப்பு ஒன்றையும், அதைத் தயாரிக்கும் புத்தகம் ஒன்றையும் கொடுத்துச் சென்றார். திடீரென்று ஒரு பூச்சி பறந்து வந்து, அந்த இனிப்பைக் கவ்விச் சென்றுவிட்டது. நஸ்ருதீன் அதைப் பார்த்து ஏளனமாக நகைத்தபடி, ‘ஏ முட்டாளே, இனிப்பை எடுத்துப் போனால் போயேன். அதை எப்படித் தயாரிப்பது என்ற புத்தகம் என் கையில் தானே இருக்கிறது’



# பிரார்த்தனைச் சீட்டில் பிரச்னைகள் தீரும்..!

## பெரியவெளிக்காடு வெக்காளி அம்மன்



மன்னர்களின் வெற்றித் தெய்வமாகத் திகழ்பவள் வெக்காளி அம்மன். அரசர்களுக்குப் போர்களில் வெற்றியை அருளும் இந்த வெக்காளி அம்மன், பக்தியுடன் வேண்டுவோரது குறைகளைத் தீர்ப்பவள்; தீயவர்களிடம் வெம்மை காட்டி அவர்களை அழிப்பவள்; பக்தர்களிடம் தாய்க்குத் தாயாக, சேய்க்கு சேயாக இருப்பவள்; சக்தியும் சாந்நித்தியமும் கொண்ட வெக்காளி அம்மனுக்கு மதுராந்தகம் அருகே அழகிய கோயில் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

சென்னை- விழுப்புரம் தேசிய நெடுஞ்சாலையில் உள்ளது மதுராந்தகம். இங்கிருந்து கல்பாக்கம் செல்லும் சாலையில், சுமார் 15 கி.மீ. தொலைவில் பயணித்தால் வருவது... விழுதமங்கலம் கூட் ரோடு. இங்கிருந்து அரை பர்லாங் தூரத்தில் உள்ளது பெரிய வெளிக்காடு! இங்குதான் கோயில் கொண்டிருக்கிறாள் வெக்காளி அம்மன்! வாழை, தென்னை மற்றும் மாந்தோப்பு என பசுமையான சூழலில் கோயில் கொண்டு நம் மனம் குளிர தரிசனம் தருகிறாள் வெக்காளி!

மேற்கு நோக்கிய கோயிலில் கிழக்கு பார்த்தபடி, அமர்ந்த திருக்கோலத்தில், சாந்த ஸ்வரூபமாகக் காட்சி தருகிறாள் அன்னை. திருச்சி உறையூர் வெக்காளி அம்மனைப் போலவே, இங்கு குடிகொண்டிருக்கும் அம்மனுக்கும் மேற்கூரை கிடையாது! பிராகாரத்தில்...

விநாயகர், அண்ணாமலையார், உண்ணாமுலை அம்மன், காயத்ரிதேவி, தட்சிணாமூர்த்தி, வள்ளி தெய்வானை சமேத சுப்ரமண்யர், பைரவர் மற்றும் தனிச்சந்நிதியில் அருள்பாலிக்கும் சனீஸ்வரரையும் தரிசிக்கலாம்! வெக்காளி






அம்மன் சந்நிதிக்கு நேரெதிரில் சற்றுத் தொலைவில் வேப்பமர மேடையும், திரிசூல, நாகர் பிரதிஷ்டையும் செய்யப்பட்டி ருக்கிறது. அதே மேடையில் ஒருபுறத்தில் சப்த மாதர்களும், மறுபுறத்தில் பைரவரும் காட்சி தருகின்றனர். மேலும் நடுநாயகமாக சித்தர்களுக்கெல்லாம் தலைமைச் சித்தராகத் திகழும் சிவபெருமான் தன் தேவியுடன் வீற்றிருக்க, அவருக்கு இருபுறங் களிலும் சித்தர்கள் சந்நிதி கொண்டிருக்கின்றனர்.

அம்மனுக்கு தினமும் உச்சிக் காலத்தில் மட்டுமே மஹா அபிஷேகம் நடைபெறுகிறது.

இந்தக் கோயிலின் விசேஷம்... பிரார்த்தனைச் சீட்டு! திருமணத் தடை, குழந்தை பாக்கியம், அம்மை முதலான நோய், எதிரிகள் தொல்லை என எதுவாக இருப்பினும் தங்களது குறைகளை பிரார்த்தனையாக, சீட்டு ஒன்றில் எழுதி, பலிபீடத்துக்கு அருகில் உள்ள சூலத்தில் கட்டிவிட்டு, அம்மனை வேண்டினால், விரைவில் பலன் கிடைக்கிறது என்கின்றனர் பக்தர்கள். அமாவாசை மற்றும் பௌர்ணமியில், பிரார்த்தனைச் சீட்டுகளை படிப்பதற்கு வெக்காளி அம்மன் வருவதாக நம்பிக்கை!

இந்தக் கோயிலில் அமாவாசை நாள்களில் பக்தர்களின் வேண்டுதலின் பேரில் சிறப்பு ஹோமமும் விசேஷ அபிஷேக ஆராதனைகளும் நடைபெறுகின்றன. இதில் கலந்துகொள்வதால் எதிரிகளின் தொல்லைகளில் இருந்து விடுபடவும், வழக்குகளில் வெற்றி பெறவும் முடியும் என்பது பக்தர்களின் நம்பிக்கை. வெள்ளிக்கிழமைகளில் நடைபெறும் லலிதா திரிசதி அர்ச்சனை, குடும்ப ஒற்றுமை, குழந்தை பாக்கியம், உடல் ஆரோக்கியம் போன்ற பல நன்மைகளை அருள்வதாக பக்தர்கள் கூறுகின்றனர்.

ஆங்கிலப் புத்தாண்டு, சித்ரா பௌர்ணமி அன்று பால்குட ஊர்வலம், நவராத்திரி போன்ற விழாக்கள் விமரிசையாக நடைபெறுகின்றன. சுற்றுப்புற கிராம மக்கள் பயன்பெறும் வகையில் அவ்வப்போது இலவச மருத்துவ முகாம்களும்,





கண் பரிசோதனை முகாம்களும் நடைபெற்று வருகின்றன. உறையூர் வெக்காளி அம்மனின் பக்தரான சுந்தரவரதன், அம்மன் தன் கனவில் தோன்றி உத்தரவு கொடுத்தன் பேரில் பெரியவெளிக் காட்டில் இந்தக் கோயிலைக் கட்டி வெக்காளி அம்மனை பிரதிஷ்டை செய்து இருக்கிறார். அன்றுமுதல் அருகில் உள்ள திருவாதூர், பவுஞ்சூர், அரியனூர், சின்ன வெண்மணி முதலான ஊர்களில் உள்ளவர்களுக்கு இஷ்ட தெய்வமாகி அருள்புரிந்து வருகின்றாள் வெக்காளி அம்மன்!

இந்தக் கோயிலில் ஆடி மாதம் மூன்று தினங்கள் நடைபெறும் ஆடித் திருவிழா மிகவும் பிரசித்த மான ஒரு விழா. பல வெளியூர்களில் இருந்தும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் விழா நடைபெறும் மூன்று நாட்களும் வந்து அம்மனை வணங்கிச் செல்கின்றனர்.

**எங்கே இருக்கிறது எப்படிச் செல்வது..?**

மதுராந்தகத்தில் இருந்து கல்பாக்கம் செல்லும் சாலையில் சுமார் 16 கி.மீ.தொலைவில் உள்ளது விழுதமங்கலம் கூட் ரோடு. அங்கே இறங்கி 1 பர்லாங் நடந்து சென்றால் கோயிலை அடையலாம்.

நடை திறந்திருக்கும் நேரம் காலை 6 மணி முதல் பிற்பகல் 2.30 மணி வரையும் மாலை 4.00 மணி முதல் இரவு 9.00 மணி வரையும் கோயில் திறந்திருக்கும். ஞாயிறு, செவ்வாய், வெள்ளி, அமாவாசை, பௌர்ணமி மற்றும் விசேஷ நாள்களில் நாள் முழுவதும் கோயில் திறந்திருக்கும்.

**இனியவை 40**

"வீரனுக்கு வலிமையான குதிரை இனிது. மாலையணிந்த அரசர்களுக்கு போர்க்களத்தில் கரிய மலைபோன்ற யானைகள் சினம் கொண்டு போரிடுதலைப் பார்த்தல் இனிது. அன்புடையார் வாய்ச் சொற்கள் கேட்பது இனிது."



# கோவை ஈச்சனாரி விநாயகர் தங்கத் தேர் பவனி..!

சக்தி காமராஜ் | அட்டைபடம் மற்றும் படங்கள்: கே.எம்.பிரசன்னா

முழுமுதற் கடவுளாகப் போற்றப்பெறும் விநாயகப்பெருமானுக்கென்றே பிரத்தியேகமாக அமைந்திருக்கும் ஆலயங்களான பிள்ளையார்பட்டி, கணபதி அக்ரஹாரம் போன்றவற்றுடன் குறிப்பிடத்தக்க ஆலயம் கோவை ஈச்சனாரி விநாயகர் ஆலயம். இந்த ஆலயத்தில் விநாயகப் பெருமான் மட்டுமே சந்நிதி கொண்டிருக்கிறார்.

**ஆலயத்தின் தலவரலாறு:**

சுமார் 450 வருடங்களுக்கு முன்பு ‘மேலைச் சிதம்பரம்’ என்று போற்றப்படும் ‘பேரூர் பட்டீஸ்வரர்’ ஆலயத்தில் பிரதிஷ்டை செய்வதற்காக, ஐந்து அடி உயரமும் மூன்று அடி பருமனும் கொண்ட விநாயகர் சிலை வடிக்கப்பட்டது. அந்தச் சிலை, ஒரு நல்ல நாளில் வண்டியில் ஏற்றப்பட்டு பட்டீஸ்வரம் கொண்டு செல்லப்பட்டது.

விநாயகரின் வாகனம், தற்போது அவர் கோயில்கொண்டிருக்கும் ஈச்சனாரி பகுதிக்கு வந்தபோது, நேரமும் காலமும் நன்றாக இருப்பதாகவும் அந்த இடத்தில் கோயில் கொண்டால், உலக மக்களுக்கு தம் அருள்திறன் பூரணமாகக் கிடைக்கும் என்பதையும் உணர்ந்தார் விநாயகர். விளைவு, விநாயகரைச் சுமந்து வந்த வாகனத்தின் அச்சு முறிந்தது; விநாயகர் அந்த மண்ணிலேயே சாய்ந்து விட்டார். எவ்வளவு முயற்சி செய்தும், அவரைத் தூக்க முடியவில்லை.

அப்போது இருந்த காஞ்சி ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள், இறைவனின் திருவுள்ளத்தை அறிந்து அங்கேயே விநாயகரைப் பிரதிஷ்டை செய்ய அறிவுறுத்தினார். அதன்படி, அங்கேயே சிறு மேடை அமைத்து விநாயகரைப் பிரதிஷ்டை செய்தனர்; பின்னர் கோயிலும் கட்டினர் என்பது தல வரலாறு.

1917-ம் வருடத்தில், மயிலை கிருஷ்ணசாமிப் பிள்ளை என்பவர், கோவை - பொள்ளாச்சி சாலையைச் சீரமைக்கும் பணியின் ஒப்பந்ததாரராகப் பணியாற்றியதாகவும், சாலை அமைக்க மண்ணை வெட்டி எடுத்தபோது விநாயகர் சிலை கிடைத்ததாகவும், பின்னர் அங்கே விநாயகருக்குக் கோயில் கட்டியதாகவும் மற்றொரு சம்பவமும் சொல்லப்படுகிறது.

கோவை - பொள்ளாச்சி சாலையில், சாலையை ஒட்டியபடியே அமைந்திருக்கிறது ஈச்சனாரி விநாயகர் கோயில். மூன்று நிலை களுடன் அமைந்திருக்கும் ராஜகோபுரத்தின் வழியாக ஆலயத்துக்குள் செல்கிறோம். நமக்கு நேரெதிரில் விநாயகப் பெருமானின் சந்நிதி அமைந்திருக்கிறது. புராணக் காலத்தில் தந்தை சிவனார் மேற்கொண்ட திருப்பணி இனிதே நிறைவேறுவதற்காகத் தேரினைத் தடுத்து நிறுத்திய அந்த கணபதி, இந்தக் கலியுகத்தில் தம்மை வழிபடும் பக்தர்களுக்கு அருள்புரிவதற்காக உரிய காலமும் நேரமும் பார்த்து இந்தத் தலத்தில் கோயில்கொண்டார் என்கின்றனர் பக்தர்கள். தமிழகத்திலேயே முதன்முதலாக விநாயகருக்கென்று தங்கத் தேர், ஈச்சனாரி விநாயகருக்குத்தான் செய்யப் பட்டதாகச் சொல்லப்படுகிறது.

நாள்தோறும் இரவு ஏழு மணிக்கு, உபயதாரர்கள் மூலம் தங்கத் தேர் பவனி நடத்தப்படுகிறது. இங்கு, விநாயகருக்கு ஒவ்வொரு நட்சத்திரத்தன்றும் ஒவ்வொரு விதமாக மலர் அலங்காரம் செய்யப்படுவது சிறப்பம்சம். அந்தந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் இந்த சிறப்பு அலங்காரத்தில் குறிப்பிட்ட கட்டணம் செலுத்தி பங்கேற்று விநாயகரின் அருள் பெறலாம்.

ஈச்சனாரி விநாயகரை வழிபடுவதன் மூலம் கல்வியில் மேன்மை, இனிய இல்லறம், குழந்தை பாக்கியம் போன்ற பலன்கள் கிடைப்பதாக பக்தர்கள் நம்பிக்கையுடன் கூறுகின்றனர்.

புதிதாக வாகனம் வாங்கும் அன்பர்கள், ஈச்சனாரி விநாயகர் கோயிலுக்கு வந்து பூஜை செய்தபிறகுதான் வாகனத்துக்கான பதிவு எண் வாங்குகின்றனர். சொந்த வாகனத்தில் வெளியூர்ப் பயணம் மேற்கொள்பவர்கள், ‘விநாயகரை வேண்டிக்கொண்டு சென்றால் பயணம் இனிதாக அமையும்’ என்ற நம்பிக்கையும் இங்கே பக்தர்களிடையே காணப்படுகிறது.

தினசரி காலை 6.30 மணிக்கும் மாலை 6.30 மணிக்கும் மூலவருக்கு அபிஷேகம் நடைபெறுகிறது. காலை 5 முதல் இரவு 10 மணி வரை கோயில் நடை திறந்திருக்கும்.

கோவை காந்திபுரம் மற்றும் உக்கடம் பேருந்து நிலையங்களிலிருந்து ஒவ்வொரு ஐந்து நிமிட இடைவெளி நேரத்தில் ஈச்சனாரி விநாயகர் கோவிலுக்கு மாநகரப் பேருந்துகள் அதிகளவில் இயக்கப்படுகின்றன. ●



Registered with Registrar of Newspapers for India
No. 42582/83 Licensed to post without Pre-payment
under Regn.No. TN/WR/CBE/016/WPP/2021-23
Regd. No. : CB/016/2021-23
Date of Publication : 28th Every Month

OM SAKTHI - FEBRUARY - 2022